*Tenral*

*Malar 3, ital 37*

*June 01, 1957*

Record no. 947

# தென்றல்

ஆசிரியர் கண்ணதாசன்

உள்நாடு (இலங்கை உட்பட) விலை 13 புதிய காசு | வெளிநாடு 20 காசு | அலுவலகம்: 'தென்றல்' சென்னை-6.

மலர் 3 | சென்னை | 1-6-57 | சனிக்கிழமை | இதழ் 37

## பூச்சரம்

செத்த பாம்பைப்போல், அந்த ஆற்றுப்படுகை வளைந்து நெளிந்து காய்ந்து காணப்பட்டது. இருமருங்கும் அடர்த்தியான சவுக்குத் தோப்புகள். கிரேக்க நாட்டுப் படைவீரர்களைப்போல் கம்பீரமாக நிற்கும் அந்தச் சவுக்கு மரங்களைக் கடந்து போனால், ஆங்காங்கே சில தாழம் புதர்கள்—மணப்பெண்ணின் பின்னல் சடைகளை நெஞ்சுக்கு இழுத்து வரும் தாழம்பூக் குழைகள்—மணவீட்டின் நறுமணங்களையெல்லாம் ஒன்று திரட்டித் தெளித்துக் கொண்டிருந்தன. வெள்ளி அணுக்கள் உதிர்வதுபோல், நீல மேகத்தில் மிதந்துகொண்டிருந்த நிறைநிலாவிலிருந்து ஒளி கொட்டிக் கொண்டிருந்தது.

உலகத்தின் இத்தகைய இன்பக் கோலத்தை அனுபவிக்க முடியாத ஒரு கிழட்டுக் குரல்—ஊர்ந்தோடி வந்தது. பொருளை இழந்தவர்களின் குரலோ, புருஷனைப் பறிகொடுத்தவர்களின் குரலோ அல்ல அது! பிள்ளையை இழந்த அன்னையின் பிதற்றல், துன்பக்குரலாய் சோக இசை முழக்கம் பூச்சோடு, அருமைமிகுந்த இளஇரவை ஊடுருவிக் கொண்டிருந்தது. கண்படு தூரத்திலிருந்த குக்கிராமத்திலிருந்து தான் அந்தக் குரல் ஊற்றெடுத்து வந்தது.

★

கூரை வேய்ந்த வீடு. கூரை முழுதும் பூசணிக்கொடி படர்ந்திருந்தது. பச்சைக் குடை பிடித்ததுபோல், பார்ப்பதற்கு அழகாக இருந்த வீட்டின் வெளித் திண்ணையில் போர்த்தலைவனைப் போன்ற ஒரு பொல்லாத உருவம் சாய்ந்து கிடந்தது. புலம்புவதும் புரண்டு படுப்பதுமாகவே அந்த உருவம் கிடந்தது. வீட்டுக்குள்ளிருந்து வரும் அழுகுரலுக்கு அந்த உருவம் எந்த விதச் சமாதானமும் கூறாமலே இருந்தது.

ஒரு காலத்தில் அந்தக் குடும்பம் குபேர வாழ்வு நடத்திய குடும்பமாக இருக்கவேண்டும்;



பணபலமில்லாவிட்டாலும் அந்தஸ்தில், அதிகாரத்தில் மேம்பட்ட குடும்பமாகத்திகழ்ந்திருக்க வேண்டும். இருபது சதை மாடுகளுக்குமேல் ஒரே நேரத்தில் கட்டிக்கிடப்பதற்கான பெரிய மாட்டுக்கொட்டம் தூர்ந்துகிடந்தது. சமஸ்தானாதிபதிகளின் காலத்து வில்வண்டி - குதிரை வண்டி ஒன்று தனித்தனியாக கழன்று துருவேறிக் காணப்பட்டது. கட்டுக்கட்டாக சிலம்பக் கம்புகள் பரணையில் கிடந்தன. இவ்வளவு சீரும் சிறப்புமாக வாழ்ந்த குடும்பத்தில் எந்தவித முன்னறிவிப்புமில்லாமல் அழுகுரல் கிளம்பக் காரணம்? நாற்பது வயதுடைய ஒரு அன்னை, 'ஐயையோ! ஊருக்குத் தெரிந்தால் காரித் துப்புவார்களே! **கடுக்காய்க்கள்ளன்** மகளைக் காணவில்லையென்றால் அம்பத்தாறு தேசமும் கைகொட்டிச் சிரிக்குமே! சோலையாண்டவா! சொக்கநாத பெருமானே!'' என்று துடித்துப் புலம்பிக் கொண்டிருந்தாள். அவளுடைய புலம்பலிலிருந்து, ஒரு அழகான பெண்ணை அந்தக் குடும்பம் இழந்திருக்கிறது என்பது மட்டும் தெரிந்தது. ஆனால் வெளியிலே கிடக்கும் அந்தப் புலிமனிதன் மௌனமாகக் கிடக்கிறானே! பாவம்! பத்தாண்டுகளுக்கு முன்னமேயே அவன் குருடனாகி விட்டான். அரளிப்பாறை மஞ்சு விரட்டுக்குப் போய் வருகையில் அவனை, எதிரிகள் ஆற்றுக்குள் வழிமறித்து கண்களை அவித்துவிட்டார்கள். அன்றிலிருந்து அவன் சடலமாகவே இல்லத்தில் முடங்கிக் கிடக்கிறான். பழிவாங்கிப் பகைப்புலத்தை ஒழிக்க அவனுக்கு வழி இல்லை. வெளியிலே கோலூன்றித் திரியவோ அவனுக்கு மனமில்லை—வெட்கம்! வாழ்ந்தவன், கீர்த்தி பெற்றவன்! உலகம் சிரிக்குமே என்ற பயம்தான் அவனுக்கு! வையகம், களங்கமில்லாத வீரத்தைத் தேர்ந்தெடுத்தா பாராட்டுகிறது! நீதியோ, அநீதியோ பாராது, முடிவிலே எவன் மற்றொருவனை முறியடித்து நிற்கிறானோ அவனைத் தானே பலசாலி என்கிறார்கள். இங்கே புலிமனிதனும் அப்படித் தான். பத்துப்பேர் சேர்ந்து அவனை மடக்கி ஒளிநேத்திரங்களைக் கொத்திச் சென்றுவிட்டார்கள். பத்துப்பேர்! தனித்தனியாக வந்திருந்தால் எதிரிகளின் தசையைக் கூறு அல்லவா போட்டிருப்பான் புலிமனிதன்! இப்போது அவன் தோற்றவன்! என்ன செய்வது? யார் யார் அவனைப் புகழ்ந்தார்களோ அவர்களெல்லாம் அவனை மனதிற்குள்ளேயே இகழ்ந்தார்கள். உண்மை நிலவரம் அறியாமல் உலகம் பேசுகிறதே என்ற கவலை அவனைத் திண்ணையிலேயே சிறைவைத்து விட்டது. சூடிக்கொடுத்தான் அவன் மனைவி. **சுகந்திமாலை அவனது ஒரே மகள்.**

சுகந்திமாலையை, அவன் ஐந்து வயதாக இருக்கும்போது பார்த்திருக்கிறான். மடியிலே வைத்துக் கொஞ்சியிருக்கிறான். வேண்டியதையெல்லாம் வாங்கிக் கொடுத்திருக்கிறான். அதற்குப் பிறகு அவன் அவளைப் பார்க்கவில்லை. பத்தாண்டுகள் உருண்டோடி விட்டன அவன் கண்களை இழந்து. தன்னுடைய அருமை மகளை—பதினைந்து வயது நிரம்பிய எழில் செல்வத்தை அவனால் காண இயலவில்லை. அவன் திண்ணையில் உட்கார்ந்திருக்கும்போது காலடிச் சத்தம் கேட்கும்; சூடியா என்பான்! 'இல்லை, சுகந்தி!' என்பாள் மகள். மகளின் குரலினிமை கேட்டு பெற்றஉள்ளம், வளர்த்தபாசம் சற்று குளிர்ச்சி பெறும். அவன் இருக்கும் திண்ணையைத் தாண்டி சுகந்தி எங்காவது போனால், போவது சூடியா, சுகந்தியா என்று அவன் கண்டுகொள்வான். சுகந்தியாக இருந்தால் அவளோடு சுகந்தமான பூவாடையும் ஓடிவரும். ஒருநாள்கூட அவள் பூச்சூடாமல் இருந்ததில்லை. கொல்லையிலே மல்லிகைப்பூ இல்லாவிட்டாலும், கூடையிலே தூக்கிவரும் மரிக்கொழுந்தையாவது அவள் சூடிக்கொள்ளத் தவறவதில்லை. அவளது அன்ன நடையையும், பின்னல் சடையையும் கண்டின்புற முடியாத அவன், அவளது 'மாய உருவத்தை' மனதிலே எண்ணி எண்ணித் திருப்திப்பட்டான். அத்துணை ஆசைக்கும் அன்புக்கும் மூலஸ்தானமாக விளங்கிய அவளே-அந்தக் குடும்பத்தின் ஒளிமுத்தே இரண்டு நாட்களாக காணப்படவில்லையென்றால்....? அதனால்தான் அந்த வயோதிகத்தாய் கதறினாள், கண்கெட்ட தந்தை புண்பட்டுக் கிடந்தான்.

★

மறுநாள் காலை ஒரு குறி சொல்லும் குறத்தி அந்தப் பக்கமாக வந்தாள். வெள்ளிப்பூண் பிடித்த சிறிய அழகிய கழியொன்று அவள் கையிலிருந்தது.

— 6ம் பக்கம் —

# கூத்தர்காள் கேளீர்!

**புகழேந்தி**

'தமிழர் – இந்தியாவின் தென் கிழக்குப் பாகத்திலும், இலங்கையின் சில பகுதிகளிலும் வாழ்பவர்கள்; ஆரியரல்லாத திராவிட வம்சத்தைச் சேர்ந்தவர்கள்.'

தமிழ் – மேற்சொன்னவர்களால் பேசப்படும் மொழி.

—சர். ஜேம்ஸ் மர்ரேயின்
புதிய அகராதி (பக்கம் 67)

'தென் இந்தியாவில் வாழ்ந்து வரும் தமிழ், தெலுங்கு, மலையாள, கன்னட மொழி பேசுகிறவர்களின் நேர்வழி மூதாதைகள் தான் திராவிடர்கள்.'

—என்சைக்ளோபிடியோ பிரிட்டானிகா
(ஆங்கில மொழி அகராதி)

'சரித்திர காலத்துக்கு முந்திய காலத்துச் சில சின்னங்கள் தவிர வடஇந்தியாவிலுள்ள திராவிடக் கலை, நாகரிகம் அத்தனையும் ஆரிய வெள்ளத்தால் அடித்துக்கொண்டு போகப்பட்டன. ஆனால் தென் இந்தியாவில் அவ்விதம் நடக்கவில்லை. நடக்க முடியவுமில்லை. இங்கு ஆரிய நாகரீகம் மிகச் சாதாரண முறையில்தான் பரவ முடிந்தது. அதனுடைய பேரலைகள் இங்கு சிறு துளிகளாகச் சிதறடிக்கப்பட்டன.'

-கே. என். சிவராஜபிள்ளை பி. ஏ.
(சென்னைப் பல்கலைக் கழக தமிழ்ப் பேராசிரியர்)
'பண்டையத் தமிழர்களின் வரலாறு'-பக்கம் 4.

இந்தியத் துணைக்கண்டம் இயற்கையாகவே இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிந்து நிற்கிறது. ஒன்றிற்கொன்று முற்றிலும் முரண்பட்ட ஆரியம், திராவிடம் என்ற இரு பெரும் இனங்களின் சொந்த பூமியான அது, அவரவர்கள் வாழ்கின்ற பகுதிகள் அவரவர்களுக்கு என்கிற முறையில் பிரிவினை செய்யப்பட்டாக வேண்டும். அப்படிப் பிரிக்கப்பட்டால்தான் 'ஏகபாரதம்' என்று பேசித் திரியும் எத்தர்களின் வார்த்தை ஜாலங்களுக்கு மயங்காமல், அரசியல், பொருளாதாரத் துறைகளில் வடநாட்டவர்களால் சுரண்டப்படாமல் திராவிடம் சிறந்து விளங்கமுடியும். கன்னடமும், தெலுங்கும், மலையாளமும், தமிழும் தமது தாய்மொழியாகக் கொண்ட தென்னாட்டு மக்கள், தமக்குத் தேவையான பலவற்றையும் செய்துகொள்ள தங்களுக்கென உரிமை பெற்றாகவேண்டும். அப்பொழுதுதான் பன்னெடும் காலமாக 'சிரஞ்சீவி'த் தன்மையோடு வாழ்ந்துகொண்டிருக்கும் அவர்களின் கலையும், இலக்கியமும், கலாச்சாரமும், பண்பாடும், பழக்க வழக்கங்களும், நாகரீகமும், நடைமுறைகளும் எக்காலமும் வாழ முடியும் என்றெல்லாம் பலமுறையும் சொல்லி வந்திருக்கிறோம். நாம் இப்படிச் சொன்னபோதெல்லாம் இந்தியாவைப் 'பாரதமாதா' என்ற எண்ணத்தோடு பார்த்து வந்தோர், நாம் சொல்பவை உண்மைக்குப் புறம்பானவையாகவும், நம்மைத் தவிர மற்றவர்களால் ஒப்புக் கொள்ள முடியாதவையாகவும் உள்ளன என்று கூறியதோடு நம்மைக் கேலியும் கிண்டலும் செய்து அலட்சியப்படுத்துவதன் மூலம் தங்களின் 'மேதா விலாச'த்தைக் காட்டிவந்துள்ளனர்.

'இமயம் முதல் குமரிவரை ஒரே கலாச்சாரம். ஒரே ஒருமைப்பாடு. அவர்கள் ஒருதாய்வழிப் பிள்ளைகள். அவர்களுக்குள் வேறு எவ்விதப் பிரிவும் கிடையாது' என்று 'பாரத'த்தின் தலைவர்களான பண்டிதநேரு, இராசேந்திர பிரசாத் ஆகியோர் முதல், சாதாரண காங்கிரஸ்காரர்கள்வரை சொல்வது மட்டுமல்லாமல், இடத்திற்குத் தகுந்தபடி தங்கள் இயல்பை மாற்றிக்கொள்வதையே நடைமுறைத் திட்டங்களாகக் கொண்டுவிட்ட கம்யூனிஸ்டுகளும், மற்றைய அகில இந்தியக் கட்சிக்காரர்களும்கூட அத்தகைய கருத்துக்குப் பின்னணி பாடியுள்ளனர். மொத்தத்தில் 'அகில இந்திய' என்ற வார்த்தைகளைத் தங்கள் கட்சிப் பெயருக்கு முன்னால் பெற்றிருக்கிற எந்தக் கட்சிக்காரர்களும் இந்தியா ஒரே கலாச்சாரத்தையும், நாகரீக, பண்பாடுகளையும் மொழித் தொடர்புகளையும் பெற்றிருப்பதாக 'அமுதுதிர்'த்துள்ளனர்.

இவர்களில் சிலரும், இவர்களை தவிர்த்த வேறு சிலரும் திராவிடம் என்பதே கற்பனை வாதம் என்றும், தமிழகம், ஆந்திரம், கர்னாடகம், கேரளம் ஆகியவை தனியானவை என்றும், அவற்றிற்குள் எவ்விதத் தொடர்பும் கிடையாது என்றும் அவை ஒன்றாகச் சேர்வதற்கு வழியே கிடையாது என்றும் 'முழங்கி' வந்துள்ளனர்.

உண்மையில் இந்தக் கருத்துகள் நியாயத்தின் அடிப்படையில் வெளியிடப்படுகின்றனவா என்றால் இல்லை. இந்தக் கருத்துக்களை வெளியிடும் வடநாட்டுத் தலைவர்கள், தென்னாடு, திராவிடம் தமக்கு மாறுபட்டது, தம்மோடு இணைந்து வரமுடியாதது என்பதை உணர்ந்து கொண்டு, செயல்முறையில் தென்னாட்டைப் புறக்கணித்து, வாயளவில் மட்டுமே 'இந்தியா ஒன்று' என்று கூறுவதைத் தொழிலாகக் கொண்டுள்ளனர். அவர்கள் அறிந்திருக்கும் உண்மையை அவர்களைக் கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றும் தென்னாட்டு, 'தொண்டரடிப் பொடி ஆழ்வார்கள்' அறிந்து கொள்ளவில்லை என்பதோடு அந்தத் தலைவர்கள் வாயளவில் கூறும் அந்தக் கருத்துக்களிலேயே உண்மை உயிரோடு உலவுவதாகக் கருதி நடைமுறையை மறந்த தத்துவ வாதிகளாகி விட்டிருக்கின்றனர்.

இந்த இரண்டு சார்பையும் சார்ந்தவர்களின் 'புத்திசாலித்தனத்தைப் படம் பிடித்துக் காட்டும் முறையில் பல சம்பவங்கள் நடைபெற்று வந்துள்ளன.

தென்னாட்டுக்கு வடநாடு இந்திய விடுதலைக்குப் பின்னால் இழைக்கும் கொடுமைகளை எண்ணி எண்ணி வருந்தி நல்ல இதயம் படைத்தோர், கட்சியையும் மறந்து தம் மக்கள் நலம் விரும்புவோர் அடிக்கடி வடநாட்டுஆதிபத்திய வாதிகளுக்கு எதிராகத் தம் குரலை எழுப்பியுள்ளனர். எழுப்புகிற அவர்கள் தமிழ்நாட்டவர்களாக மட்டுமல்லாமல், ஆந்திரத்தாராகவும், கேரளத்தாராகவும், கர்னாடகத்தாராகவும் இருந்திருக்கின்றனர் என்பதையும், கேரளத்தார் பேசும்போது கேரளம் கொள்ளையடிக்கப்படுகிறது என்ற முறையிலோ, கர்னாடகத்தார் பேசும்போது கர்னாடகம் பிற்படுத்தப்படுகிறது என்ற முறையிலோ அல்லாமல் மொத்தத்தில் அவர்கள் எல்லோருமே தென்னாடு என்ற பதத்தையே தங்கள் எல்லோருக்குமாகப் பயன்படுத்தி வந்துள்ளதை யாரும் மறந்தோ மறுத்தோ விடுவதற்கில்லை.

ஆந்திரத்து கோபால் ரெட்டியும், கேரளத்து அன்னிமாஸ்கரனும், கர்னாடகத்து அனுமந்தையாவும் தமிழகத்து குமாரசாமி ராஜாவும் காங்கிரஸ் சார்புடையவர்கள். இந்திய ஒற்றுமையில் அவர்களுக்கு உள்ள நம்பிக்கையை யாரும் குறைகூறுவதற்கில்லை. எனினும் அவர்களால் டில்லி திட்டங்களை வடக்குக்கு மட்டுமே செய்துகொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கமுடியவில்லை. அப்பொழுதெல்லாம் அவர்களுக்கு தமிழர், ஆந்திரர், கேரளீயர், கன்னடர் என்ற உணர்வுகள் மங்கி தாம் அனைவரும் ஒருதாய் வழி மக்கள் என்ற உணர்வே மேலோங்கி நின்று அவர்களைத் தென்னாட்டிற்காகக் குரல்கொடுக்க வைத்துள்ளது.

இந்த நிலைமைகள் நமக்கு வடநாட்டிலிருந்து வேறுபட்ட தென்னாட்டை, திராவிடத்தை தெளிவுபடுத்தியும் கூட, இன்றும் அதனை ஏற்றுக்கொள்ள மறுக்கும் 'அரசியல் ஒட்டக்கூத்தர்கள்' இங்கே நடமாடுவதைக் காணமுடிகிறது. அவர்களுக்கெல்லாம் நாம் சொல்லிவந்துள்ள கருத்துகளுக்கு வலிவும், பொலிவும் தரும் வண்ணம், அண்மையில் நாமும் அவர்களும் மதிக்கத் தகுந்த மதிப்பிற்குரிய அறிஞரொருவர், தெளிவானதொரு விளக்கத்தை அளித்துள்ளார்.

தென்னாட்டு மொழிகளில் மலிந்த விலையில் உயர்ந்த நூல் வெளியிடுவதற்காக 'தென்மொழிகள் புத்தக டிரஸ்டு' எனும் அமைப்பு உருவாகி, தற்பொழுது சிறந்த புத்தகங்களை வெளியிடத் தொடங்கியுள்ளது. அது வெளியிட்டுள்ள தமிழ் நூல்களில் ஒன்றான '**சிறுகதை மஞ்சரி**' என்ற சிறுகதைத் தொகுதிக்கு முன்னுரை (பொதுவுரை) எழுதியுள்ள அவர் குறிப்பிடுகிறார்:

'தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளுக்காகவே இந்நிலயம் ஏற்படுத்தப்பட்டதற்குத் தக்க காரணங்கள் உண்டு. ஏனெனில் இவை தென்னாட்டு மொழிகள், 'தக்கணம்' என்பது பூகோள நூற்படி பழைய இந்தியாவிலே விந்தியத்தின் தென்பாகமானாலும், பண்பாட்டின்படி இந்நான்கு மொழிகளையோ, அவற்றின் கிளைமொழிகளையோ பேசும் மக்களைக் கொண்ட பிரதேசத்தையே குறிக்கும். இம்மொழிகள் நான்கும் ஓரினத்தன என்பதில் ஐயமில்லை......இம்மொழிகளிடையே காணப்படும் ஒருமைப்பாடு தவிர, இம்மொழி பெசும் மக்களிடையேயும் காணப்படும் கலாச்சாரம் இப்பகுதியை இந்தியாவின் ஏனைய பகுதியினின்றும் தனித்துக் காட்டுகிறது. சாதாரணமாக நாம் அறிந்துகொள்ளும் கர்னாடக சங்கீதமும், சிற்பக்கலையும், கட்டடக் கலையும் தனிப்பெருமை உடையன. மக்களின் பழக்க வழக்கங்கள், சடங்குகள், விழாக்கள் முதலியவற்றிலும் குறிப்பிடத்தக்க ஒருமைப்பாட்டைக் காண்கிறோம். இத்தனிச் சிறப்புகள் இந்நூலகத்தாரின் வெளியீடுகளால் பிரதிபலிக்கும் என நம்புகிறேன்.

இதிலே திராவிடம் என்று அந்தப் பகுதிகள் குறிக்கப்படவில்லையே என்ற குறைபாடு நமக்கு இருக்குமானால் அதையும் அவர் தெளிவுபடுத்தத் தவறவில்லை. அவர் இப்போது உள்ள நிலையில் திராவிடம் என்று (உண்மையைக்) குறிப்பிட்டால், அவரையும் எங்கே திராவிட இயக்கத்தோடு சம்பந்தப்படுத்தி விடுவார்களோ என்ற அச்சம் அவருக்கு உள்ளது. ஆதலால் அவர் மேலே......என்ற அடையாளமிட்ட வரியில் குறிப்பிடுகிறார் "திராவிடம்" என்ற அடைமொழியைச் சேர்க்க நான் தயங்குகிறேன். ஏனெனில் அது 'மொழி', 'இனம்' என்ற பொருளில் கொள்ளப் படாமல், கருத்து வேற்றுமை, அரசியல் என்ற நோக்குடன் பயன்படுத்தப்படுகிறது' என்று.

இவரது இந்தக் கருத்துகள்மூலம் திராவிடம் என்பதன் தனித்தன்மை புலப்படுவதோடு மட்டுமல்லாமல், அரசியல் கருத்து வேறுபாடுகளுக்கும் அப்பாற்பட்டதான ஒன்றாக அது கொள்ளப்பட்டாகவேண்டும் என்பதுவும் தெளிவாகிறது.

எனவேதான், தலைவர் **அண்ணு** அவர்கள் "திராவிட நாடு திராவிடருக்கே!' இது ஒரு கட்சியின் முழக்கமல்ல, இனத்தின் இருதயகீதம். எல்லாக் கருத்தினராலும், எல்லாக் காலத்தவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட மறுக்க முடியாத உண்மை' என்று முன்பே தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

'சிறுகதை மஞ்சரி'யில் இந்தக் கருத்தை வெளியிட்டவர் சாதாரணமானவரல்ல. நம்முடைய சார்புடையவருமல்ல. அவர்தான் கனம் **பி. வி. இராசமன்னர்** அவர்கள். கனம் இராசமன்னர் அவர்கள் சென்னை உயர்நீதிமன்ற பிரதம நீதிபதிமட்டுமல்ல, தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டவரும்கூட. இத்தகைய அறிஞர்களின் விளக்கங்களாவது கட்சிக் கண் கொண்டு நாட்டையும், இனத்தையும், மொழியையும் பார்த்துக் கருத்துக் குருடர்களாக, அகில இந்திய தாசர்களாக நடமாடும் 'அரசியல் ஒட்டக்கூத்தர்'களுக்கு தெளிவளிக்கும் என்று நம்புகிறோம். ★

**சிறப்புக் கூட்டம்**
9-6-57 ஞாயிறு காலை
9 மணிக்கு
சென்னை, அரண்மனைக்காரத் தெரு, கோகலே மண்டபம்
தலைவர்:
**க. அறிவழகன் எம். ஏ.**
பேச்சாளர்கள்:
**கண்ணதாசன்**
'உலகம் இவ்வளவுதான்!'
**டி. கே. சீனிவாசன்**
'தத்துவ வரலாறு'
**கி. மனோகரன் எம். ஏ.,**
'அபாய அறிவிப்பு'
நுழைவுக் கட்டணம்:
ரூ. 1. அணா எட்டு
—சிந்தனையாளர் கழகம், சென்னை-1.



# தும்மல்!

சென்னைக்கு வந்து ஒரு திங்களாகியும் இன்னும் கடற்கரையை காணவில்லையென்றாள்; என்னுள்ளம் கலந்த அச்சிதள மொழியுடையாள், கொவ்வைக் கனியுதடுடையாள். பொறுக்குமா என் உள்ளம்? காதல் கனிந்த உள்ளம். கனிந்தது கனிவு. கூட்டிச் சென்றேன்.

கடற்காற்றின் இன்பசுகம்! ஆகா! அதுவும் என்னுள்ளம் கவர்ந்த இன்பக் கனிமொழியாள் அருகிருக்க அனுபவித்தேன். எங்கிருந்து தான் வந்ததோ தும்மல்! ஒன்று; இரண்டு எனத் தும்மினேன்.

என் இதயம் கவர்ந்த அவள் ஊடினாள். "யாருமமை நினைத்தார்? அதனால் நீர் தும்மினீர்?" என்றாள்.

'யாரும் என்னை நினைக்கவில்லை' கடற்காற்றுப் பட்டோ அன்றி, தோகைமயிலின் கருங்கூந்தல் பட்டோ தும்மினேன். உனைத் தவிர எனக்கு வேறு யாருளர்?' என்றேன்.

'இக்கூற்றை நம்ப, நான் என்ன பேதையா?' என்றாள்.

எந்நிலைமையை எப்படித்தான் விளக்குவது? புரியவில்லை. ஊடலுடனே வீடடைந்தோம். அன்றிரவு அவள் என்னுடன் பேசவில்லை. முதல் சந்திப்பு நடந்த அந்தத் தினம் என் நினைவில் வந்தது.

★

'வேலூர்தான் நான் பிறந்த ஊர். அன்னையும் தந்தையும், நான்பிறந்த பின் ஒருவர்பின் ஒருவராக மறைந்தார்கள் ஓராண்டில். கருணை உள்ளம் கொண்ட ஒரு பெரியவரால் வளர்த்து ஆளாக்கப்பட்டேன். படிக்கவும் செய்தேன். உயர்நிலைப் பள்ளி இறுதியாண்டு அவ்வாண்டு குறள் போட்டி ஒன்று. அதில்,

**"பற்றுக பற்றற்றான் பற்றினை
அப்பற்றைப்
பற்றுக பற்றுவிடத்து"**

இக்குறள்தான் வாதத்திற்குரிய குறள்.

குறளுக்கு உரைகண்ட உரையாசிரியர், பற்று என்பதை ஆசை அவாவென உரை கண்டார்கள். இதைத்தான் அவள் கொண்டாள் தன் வாதமென.

ஆனால், நானோ பன்மொழிப் புலவரொருவரின் உரை கண்டேன், 'பற்றற்ற தன்மைதான் உயர்நிலையானால், அது விலங்கிடம் காணலாம். இவற்றைவிட அதிகமாக கல்போன்ற உயிரில்லாப் பொருளிடம் காணலாம். வள்ளுவரோ குறுகிய தற்பற்றையே பற்றென்றார். காதலிலும், கடவுளுணர்விலும், இவ்விரண்டில் தற்பற்று அழிந்துவிடும். உண்மையான கடவுட்பற்று, காதற்பற்று இரண்டும் நேரல்ல. இதுதான் நான் கொண்ட பொருள்.

இருவருக்கும் திரண்டெழுந்தது வாதம். இடையிடையே கைகொட்டல். நடுவர்களின் தீர்ப்பு; வெற்றி எனக்குத்தான்.

அன்றலர்ந்த தாமரையாம் அவள் முகம்; மதிகண்ட தாமரைபோல் ஆகிவிட்டது.

வீடு செல்லும் வழி – தனிமை நாங்களிருவரும்தான்-பேச்சில்லை.

'மன்னிக்க வேண்டுமென்னை. வருத்தமா என்மீது?' என்றேன்.

'வாதத்தில் வருத்தத்திற்கிடமேது?' என்றாள்.

இப்படித்தான் எங்கள் பேச்சின் ஆரம்பம். இதன்பின் எனக்குத் தினமும் ஒரு புன்னகை. நானும் அவ்வாறே!

அதே ஆண்டு இறுதி கல்லூரியில் நாடகம். அதில் நான்தான் முக்கியப் பகுதி. அவள்தான் என் காதலி. நடித்தோம் பார்த்தோர் பரவசப்படும்படி. எங்கிருந்து வந்ததோ அவ்வளவு உணர்ச்சி பாவம்!

எட்டியிருந்த தொடர்பு-கிட்டியது நாடகத்தின்மூலம். காதலர்களானோம்-கீதம் பாடினோம்.

எவருமில்லை எங்கள் காதலைத் தடுக்க. அவளும் என்னையே ஒத்திருந்தாள்.

சென்னையில் வேலை ஒன்று கிட்டியது. பிரிவும் எங்களை வாட்டியது. பிரிந்தோம் பிரியாமல், வீடொன்று கண்டு அவளைக் கூட்டி வந்தேன்.

வாழ்க்கை ஒரு வண்ணமலர்ச் சோலையென்பர். அதைச் சுற்றி சிறகடித்துப் பறக்கும் கிள்ளையென்பர் எங்களை! மாதமென்ன மந்த நடைபோடுகிறதே என்பர் வாழ்க்கையில் சலிப்புற்ற கிழவர்கள். காற்றினும் கடுகிச் செல்கிறதே என்பர் என் போன்ற வாலிபர்கள். இன்பவாழ்வை இழக்க எங்கிருந்து தான் வந்ததோ அந்தத் தும்மல்! இந்த எண்ணங்களிடை உறங்கினேன்.

★

காலைநேரம் கண்விழித்தேன். பேச்சரவம் கேட்டேன். கொல்லைப் புறம் – முல்லைத்தொட்டியோரம், அடுத்த வீட்டுக்காரியோடு நின்றிருந்தாள். உதட்டின் அசைவு கண்டு ஒட்டுக்கேட்டேன். அவள் சொல்வாள்:

'இதுகாறும் என் அத்தான் எனக்கே சொந்தமென எண்ணியிருந்தேன். நேற்றது பொய்த்ததடி- அந்நேரம். கடற்கரையோரம். இன்பப் பேச்சில் மூழ்கியிருந்தோம் தும்மினார் திடீரென்று. நான் அவரை நினைக்கவில்லை. ஆனாலும் தும்மினார். யாரோ ஒருத்தி அவருளத்தில் பெற்றுவிட்டாள் இடம். இனி நான் எதற்கு வாழவேண்டும்?'

சந்தேகம் ஒரு தொத்து நோய்! இதை தீர்ப்பது எங்ஙனம்? யோசித்தேன். அப்போது தமிழகத்துப் பழங்கால நம்பிக்கை ஒன்று நினைவில் வந்தது. யாராவது நம்மை நினைக்கும்போது தும்மல் வருமென்றும், அப்படித் தும்மிடும் போது வாழ்த்து சொல்வது என்பதுதான். பிணக்கைத் தீர்க்க வழியேதுமின்றிப் பிரிந்தேன்.

அன்றிரவு தனியறையும் சிந்தனையும்தான் எனக்குத் துணை. சந்தேகச் சங்கடம் போக்கும் வழி தெரியவில்லை. திடீரென்று ஒரு தும்மல் வந்தது. தும்மினேன்.

ஆடிவரும் குத்துவிளக்குபோல் வண்ண ஒளிகொண்டு வந்தாள் என்னிடம். வண்ணமலர்க்கையை என்மீது மேயவிட்டாள்.

'அத்தான்'

'என்ன வடிவு, சந்தேகம் தீர்ந்ததா?' என்றேன்.

'சந்தேகமா? அது என்ன அத்தான்?' என்றாள்.

'அதுதான், இன்று காலை-கொல்லைப்புறத்தில் உன் தோழியிடம் சொல்லிக் கொண்டிருந்தாயே அது!'

'ஒகோ! அதுவா – நேற்று சந்தேகப்பட்டது உண்மைதான். ஆனால் அது இப்போது தீர்ந்து விட்டதே?'

'எப்படி?'

'இப்போது நான் உங்களை நினைத்துக் கொண்டிருந்தேன். நீங்கள் தும்மினீர்கள். அதனால் தான்!'

பிறகென்ன? இன்பபுரிக்கு நுழைவுச்சீட்டு வாங்கினேம். அப்பொழுதுதான் பழங்காலப் பழக்கத்தை வைத்து வள்ளுவர் இயற்றிய இரு குறள்கள் நினைவிற்கு வந்தன.

**'வழுத்தினாள் தும்மினேனாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர் என்று'**

**'ஊடியிருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை
நீடுவாழ் கென்பாக்கு அறிந்து'**

முதல் தும்மல் எங்களைப் பிரித்தது. இரண்டாவது தும்மல் எங்களைச் சேர்த்தது. மேற்காணும் இரு குறள்களும் அதைத்தான் உணர்த்துகின்றன. வாழ்க இரண்டாவது தும்மல்! ★

# மயானப் பாதையில் மல்லிகைப் பூக்கள்!

அரசியலை நடத்தும் ஒரு கட்சிக்கு எதிர்ப்புகள் ஏற்படுவதும், பின் மறைவதும் இயல்புதான். ஆனால் அந்த அரசுக்கு தனது சொந்தக் கட்சிக்குள்ளேயும் எதிர்ப்பு ஏற்படத்தொடங்கி விட்டால் உள்ளபடியே அந்தக் கட்சி ஆட்டங்கண்டு விட்டது என்று துணிந்து கூறலாம். காங்கிரஸ் கட்சிக்கு எதிர்ப்பு இருந்தது. வளர்ந்தது. தன் சொந்தக் கட்சிக்குள் எதிர்ப்பு இருந்ததுமில்லை. அவ்வாறு இருந்தாலும் அதை வெளிக்காட்டிக் கொள்வதுமில்லை. ஆனால் இப்போதுதான் காங்கிரஸ் கட்சிக்கு உள்ளுக்குள்ளேயே எதிர்ப்பு வலுத்து வருகிறது. புதிய கல்வித்திட்ட மறியலில் பார்த்தோம். காங்கிரஸ் உறுப்பினர்களே திட்டத்தை எதிர்த்தார்கள். காமராசரே அந்தத் திட்டத்தைக் கண்டித்தார். அதைப்போல் இப்போது புதிய வரிகள் குறித்து நாடெங்கணுமிருந்து எதிர்ப்புகள் கிளம்பியிருக்கின்றன. தென்னாட்டில் மட்டுமல்ல வடநாட்டில்கூட புதிய வரிகளைக் கண்டித்து அத்தனை கட்சியினரும் கண்டனம் தெரிவித்திருக்கிறார்கள். கட்சிசார்புற்ற பொதுமக்கள்கூட 'இது ஒரு ஆட்சியா?' என்று கேட்கிறார்கள். அந்த அளவுக்கு 'வரிப் பிரச்சினை' சிக்கலாகிவிட்ட பிறகும்கூட மாமேதை நேரு வரிகளுக்கு வலிய வக்காலத்து வாங்கிப் பேசி வருகிறார். மனிதர்குல மாணிக்கம் அவர், ஆனால் அவர் மனிதர்களின் குரலை மதிக்கவில்லை.

**"திட்டத்தை நிறைவேற்றப் புதிய வரிகளை விதிப்பது ஒன்றே வழி. வேறு வழியில்லை. இல்லாவிட்டால் சர்க்காரின் கொள்கை மாறிவிடும்."**

—பண்டிதரின் சமாதானப் பேச்சு இது. செருப்புக்காகக் காலை துண்டிக்கச் சொல்லும் 'அபரிமிதமான' புத்திசாலித்தனத்தைக் கூட அனுமதிக்கலாம். பண்டிதரின் இந்த 'வேதாந்தத்தை' நல்ல இருதயம் படைத்தோர் எவரும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். வரியைக் குறைத்தால் கொள்கை கெட்டுவிடுமாம்! ஆச்சாரியார் சொன்னார், 'சக்திக்கு ஏற்றாற்போல்தான் வரிப் போடவேண்டும். இல்லாவிட்டால் திட்டத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டியதுதான்' என்று. அதற்குப் பதில் சொல்லும் வகையில்தான், திட்டத்தை மாற்றினால் கொள்கை கெட்டுவிடும் என்கிறார். காங்கிரஸ் கொள்கைகள் அனைத்தும் கல்லின்மேல் எழுத்துப் போன்றது என்ற நினைப்பில் பண்டிதர் பேசிவருகிறார். எந்தக் கொள்கையில், காங்கிரஸ் திடமான, திட்டவட்டமான முடிவுகொண்டிருக்கிறது?

கதரை ஆதரிக்கிறார்கள்; அவர்களே ஆலைத்துணியை ஆதரிக்கிறார்கள்; அவர்களேதான் கைத்தறியை அணியுங்கள் என்றும் சொல்லுகிறார்கள். இதில் எது காங்கிரசின் கொள்கை?

சிவாலயத்தைத் தரிசிக்கிறார்கள்; விட்டுணு கோயில் வரவேற்பில் 'முழங்கு'கிறார்கள்; அவர்களே—அந்தப் பெரியவர்களேதான் அனுராதபுரத்தில் புத்தரைப் பற்றி விளக்கவுரை நிகழ்த்துகிறார்கள்; இதில் எது காங்கிரஸ் கொள்கை?

சென்னையில் மதுவிலக்கு-மைசூரிலே இல்லை; இதைப்போல் பல மாகாணங்களில் இருக்கின்றன. இதில் எது காங்கிரசின் கொள்கை? சென்னை மதுவிலக்கா? மைசூர் நிலைதானா?

கொள்கை கெட்டுவிடும் என்று கூறும் பண்டிதர் இதற்கென்ன பதில் சொல்கிறார்! கொள்கை கெட்டுவிடுமாம்! மக்கள் வாழத்தானே கொள்கை! மக்களால் தாங்கமுடியாத வரிகளைவிதித்து, அவர்களை வதைத்துத்தான் கொள்கையைக் காப்பாற்ற வேண்டுமா? அப்படியென்ன ராட்சசக் கொள்கை காங்கிரஸ் கொள்கை! மக்கள் அழிந்த பிறகு அந்தக் கொள்கையை எந்த 'ஜோதி மனிதன்' காப்பாற்றினால்தான் என்ன! மக்களைக் காப்பாற்றத்தான் காங்கிரஸ் கட்சியா? அல்லது காங்கிரஸ் கட்சி வாழத்தான் மக்களா? மயானப் பாதைக்கா மல்லிகை தூவுவது? வாழ்க(!) அரசியல் மேதைகள்! ★

"போற்றுபவர் போற்றட்டும் புழுதி வாரித்
தூற்றுபவர் தூற்றட்டும்; தொடர்ந்து செல்வேன்
ஏற்றதொரு கருத்தை என(து) உள்ளம் என்றால்
எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன்: அஞ்சேன்!"

எண்ணம்

மலர் 3 ‖ 1-6-57 ‖ இதழ் 37

# விஷக் காய்ச்சல்!

கடந்த இருபது நாட்களாக சென்னை நகரிலும், அதன் சுற்றுப்புறங்களிலும், விஷக் காய்ச்சல் பீதி தலைவிரித்தாடுகிறது. நோய் கண்டவர்கள் நீங்கலாக மற்றவர்கள் அச்சத்தால் அயர்வுற்றிருக்கின்றனர். நகரிலே அதிகமான மக்கள் நடமாட்டமில்லை. மக்கள் அவதிப்படுவதை கண்கூடாகப் பார்க்கிறோம்.

ராசிபலன் கூறும் தினசரிப் பத்திரிகைகள் ஒரே ராசிக்காரருக்கு பலவிதமான பலன்களைக் கூறி மக்களைப் பைத்தியக்காரர்களாக்கி வருவது அனைவருக்கும் தெரியும். மிதுன ராசிக்காரருக்கு எதிர்பாராத லாபம் என்று சுதேசமித்திரன் எழுதினால், அதே ராசிக்காரருக்கு பொருள் விரயம் என்று 'தினமணி' எழுதுகிறது; 'மக்கள் முற்போக்'குப் பத்திரிகையான 'தினத்தந்தி'யோ அதே ராசிக்காரருக்கு 'தேசசஞ்சாரம்' என்று எழுதுகிறது. இதில் எதை நம்புவது என்று ராசிபலன் பிரியர்களுக்குப் புரிவதில்லை. தங்களின் மனநிலைக்கு ஏற்றாற்போல் தங்களைச் சாந்திப்படுத்திக்கொள்வார்கள். அதைப்போல, சென்னை விஷக் காய்ச்சல் பிரச்சினையிலும் தினசரிப் பத்திரிகைகள் குழப்பத்தைக் கிளறிவிட்டன.

சென்னையில் விஷ சுரம்!- ஒரு பத்திரிகை! பொதுமக்களே உஷார்! - மற்றொரு பத்திரிகை! காட்டுத் தீபோல் பரவுகிறது!-மக்கள் முற்போக்குப் பத்திரிகை!

பயமில்லை குறைந்து வருகிறது-வேறொரு பத்திரிகை!

யாரும் சாகவில்லை! பொது ஜனங்கள் பயப்படவேண்டாம்-வேறொரு பத்திரிகை!

சென்னையில் விஷ சுரம்- ஆயிரக்கணக்கானோர் அவதி! வெளியூர்க்காரர்களே ஜாக்கிரதை!-மதுரை முற்போக்குப் பத்திரிகை!

-இவ்வாறு ஒவ்வொரு பத்திரிகையும் தினசரி குழப்பிக் கொண்டிருக்கின்றன. இதில் எது உண்மையான தகவல் என்று இதுவரை சரியாகப் புரியவில்லை. ஆஸ்பத்திரிகளில் நோயாளிகள் நிறைந்திருப்பதாகக் கேள்விப்படுகிறோம். சாதாரண நோயாளிகள்கூட விஷக் காய்ச்சல்-விஷக்காய்ச்சல் என்று கருதி ஓடியாடிப் புலம்புவதாகச் சொல்லப்படுகிறது.

சர்க்கார் தடுப்பு நடவடிக்கை எடுத்து வருவது மகிழ்ச்சிக்குறியதுதான். கடமையைச் செய்கிறார்கள். ஆனால், இந்த நோய்க்கான காரணம் என்ன என்பதை ஆராய அரசியலார் தீவிர நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. மலாயா கப்பலிலிருந்து தான் பரவியது என்பது ஒரு பக்கமிருக்கட்டும்; வந்து புகுந்த நோயை எப்படி அழிப்பது என்பதிலேதான் மருத்துவர்கள் கவனம் செலுத்துகிறார்களே தவிர, இந்த நோய்க்கு அடிப்படை என்ன? இதைத் தடுக்க மார்க்கமே இல்லையா? - என்பதை நமது மருத்துவர்கள் ஆராய்ந்து கண்டால் அந்த ஆராய்ச்சியின் ஈவு என்றைக்கும் பயன்படும். ஆனால் இப்போது சென்னைக்கு வந்திருக்கும் விஷக்காய்ச்சல், யாருக்காவது கண்டால், அந்த நோய் அதனுடைய சக்தியைக் காட்டி விட்டுத்தான் பிரிகிறது என்பதை யாரும் மறுக்கமுடியாது. ஆகவே, சர்க்கார் வருமுன் காக்கும் பணியோடு, வந்தபின் வேதனையைக் குறைப்பதற்கான சிகிச்சையையும் கண்டுபிடிக்க முயலவேண்டும்.

அடுத்தபடியாக, இந்த நோய் மலாய் நாட்டுக் கப்பலிலிருந்து வந்தது என்கிறார்கள். அது உண்மைதான். அந்த நோய் மலாயாவுக்கு எப்படி வந்தது? இந்தத் தகவலை அறிய இந்திய அரசியலார் அந்த நாட்டு மருத்துவர்களோடு தொடர்புகொண்டிருக்கவேண்டும்! அதைப்போல் மாலாய் நாட்டு அரசியலாரும் அதற்கான நடவடிக்கையில் ஈடுபட்டாக வேண்டும். வேரை விட்டுவிட்டு கிளைகளுக்கே மருந்து தடவிப் பயனில்லை. ஒரே ஒரு கப்பலில் வந்த நோயே, ஒரு பெரிய நகரத்தை சீரழிக்கிறது என்றால் அந்த நோய் எதிர்ப்பாரில்லாது அகிலம் முழுதும் பரவினால் மக்களின் கதி என்னவது?

இந்த விஷக்காய்ச்சலுக்கு சில தனித் தன்மைகள் இருப்பது புலனாகிறது. வசதிக்குறைவால் ஏற்படும் அசுத்தங்களிலிருந்து இந்த நோய்க்கிருமிகள் உருவாவதில்லை. ஏனென்றால் இப்போது சென்னையில் செல்வந்தர் வீடுகளில்கூட விஷ நோயால் அவதிப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அடுத்தாற்போல் இந்த நோய் சில டாக்டர்களைக் கூடப் பிடித்திருக்கிறது. முதலில் குறிப்பிட்டதுபோல் இந் நோய் கண்டவர்கள் அந்த நோயால் ஒரு ஆட்டங் கண்டுதான் தலைதூக்குகிறார்கள்.

விஞ்ஞான வித்தகர்கள் தங்களின் கண்டுபிடிப்புகளை பரிசோதித்துப் பார்ப்பதின் விளைவு என்று சிலர் ஐயுறுகிறார்கள்! அது உண்மையாயின் மலாய் நாட்டிலும், அதன் மூலம் சென்னையிலும் மட்டும்தானா அந்நோய் பரவியிருக்கும் என்று சந்தேகிக்க இடமிருக்கிறது.

எங்கிருந்தோ புறப்பட்ட விஷ அணுக்கள் ஒவ்வொரு தேசமாக சுவை பார்த்துப் போவதுபோலிருக்கிறது, அந்த அணுக்களைத் தீர்த்துக் கட்டுவதற்கான எதிர்த் தாக்குதலை மருத்துவர்கள் நடத்தினால்தான் இனியொரு முறை அந்த அணுப்படையின் மாயத் தாக்குதலுக்கு மக்கள் ஆளாகாமலிருப்பர் என்பதை சர்க்காரின் மேலான கவனத்திற்கு நாம் கொண்டுவர விரும்புகிறோம்.

யாரும் சாகவில்லை என்பதை மட்டும் காரணமாகக் காட்டி, இந்த நோய் சாதாரணமானது என்று ஒதுக்கிவிட சர்க்கார் எண்ணக்கூடாது. அந்த முறையில் சர்க்கார் முக்கியஸ்தர்கள் பத்திரிகைகளுக்கு செய்தி கொடுப்பது வன்மையாகக் கண்டிக்கத்தக்க அலட்சிய மனப்போக்காகும்.

குஷ்டம் பிடித்தவர்கள் ஆண்டுக் கணக்கில் சாகாதிருக்கிறார்கள். ஆகவே, ஆளைக் கொல்லாத நோய் அது; யாரும் கவலைப்பட வேண்டியதில்லை என்று எந்த மருத்துவராயினும் சொன்னால் அவரைச் சமுதாய விரோதி என்று துணிந்து கூறலாம்.

காங்கிரஸ் சர்க்கார் இங்கேயும் கட்சிப் பிரச்சினையைக் கொண்டு வராமல் விஷக்காய்ச்சலைத் தீர்ப்பதற்கான வழிகளில் தீவிரமாக ஈடுபடுவார்கள் என நம்புகிறோம். ★

# பன்மொழிப் புலவர் மணிவிழா!

★

அருந்தமிழ்க் குலத்தீர்!

பன்மொழிப்புலவர் கா. அப்பாதுரையார் அவர்களின் மணிவிழாபற்றிய எனது கருத்தை சென்ற திங்கள் நமது இதழில் 'எண்ண'மாகத் தீட்டியிருந்தேன். பன்மொழிப்புலவர் ஆற்றியிருக்கும் தமிழ்த் தொண்டினைப்பற்றி நான் உங்களுக்கு எடுத்துரைக்கத் தேவையில்லை. தொல்காப்பியத்திலிருந்து மறுமலர்ச்சி இலக்கியங்கள் வரை, அத்தனையிலும் புகுந்து நம்மவர்க்கு தேவையானவற்றை—இயக்கத்திற்கு வேண்டுவனவற்றை எடுத்துத் தந்த தமிழறிஞர்களில் முதன்மையாக வைத்துக் கருதத்தக்கவர் நமது பன்மொழிப் புலவரேயாவார்கள்.

அவர் ஆற்றியிருக்கும் தொண்டுகளையும், இனி அவர் ஆற்றியாகவேண்டிய தொண்டுகளையும் மனதிலே கொண்டு, அவரது மணிவிழா நிதிக்கு இயன்றன செய்து சிறப்பிக்க வேண்டுகிறேன். விழா நிகழ்ச்சிகள் விரைவில் அறிவிக்கப்படும்.

—கண்ணதாசன்

நிதியனுப்புவதற்கான முகவரி பிறிதோரிடத்தில் பிரசுரிக்கப்பட்டுள்ளது.



காதலையும், வீரத்தையும் நிலைக்களனாகக் கொண்டு வாழ்ந்த தமிழகம், இலக்கியக் கொம்பிலே கவிதைக் கொடிகளைப் பின்னிப் படரவிட்டு வேடிக்கை காட்டிய காலம் ஒன்றிருந்தது.

காலைக்கதிரவன் - மாலைமதியம் - பசுதென்றல்-கானாறு - தேனருவி- மயில்-குயில்-தேன்சிட்டு - பழமுதிர்சோலை - ஒலிகூட்டும் புள்ளினம் இவைகளைக் கண்டதும் உணர்ச்சி வயப்பட்ட மனிதனின் கவிதா உள்ளத்தில் கவிதை வெள்ளம் பொங்கிப் பெருகுகிறது. இயற்கை தரும் காட்சியின் மாட்சியில் உள்ளத்தைப் பறிகொடுக்கும் மனிதன் எவனும் நெக்குருகத் தவறுவதில்லை.

பாடஇவன் - ஆடஇவள் - ஆளஇவர்-உழ அவர்கள் என்ற நிலையின்றி காவலரும், பாவலரும்-உழவரும், ஊர்காப்போரும் வேற்றுமையின்றி இலக்கியப் பூங்காவில் உலவிய காரணத்தினால்தான் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனும், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும், இளங்கோவடிகளும், பெருங்கோப்பெண்டும், காக்கைப் பாடினியும் வெவ்வேறு சூழலில் வாழ்ந்தாலும் தேன்தமிழில் தித்திக்கும் கவிதைகளைத் தரமுடிந்தது.

நாடும், நாட்டுமக்களும் இலக்கியம் பேணும் நற்பண்பாளர்களாக இருந்ததினால் தமிழ்ச்செல்வர்கள் இலக்கண வரம்பு கட்டி கருத்து மல்லர்களுடன் சொற்சிலம்பமாடி மகிழ்ந்தார்கள். இம்மகிழ்ச்சி காரணமாக தமிழர் அகமும், புறமும் ஒரு சேரப்பெற்று உருவும், திருவும் பொலிய பாங்குடன் வாழ்ந்தார்கள்.

இயற்கையின் மடியில் தவழும் கிராமப்புற மக்கள்கூட வாழ்ந்த தமிழகத்தில் உள்ளத்தின் உணர்ச்சிகளை கன்னித்தமிழின் எளிய நடையில் சுவை நனி சொட்டச் சொட்ட ஆற்றோரத்தில்-சாலையின் மருங்கில் கிணற்று மேட்டில் - களத்தடியில் - திருவிழாக்களில் - கேளிக்கைக் கூடங்களில் - மங்கையர் அரங்கில் ஆடிப்பாடிய சேதி இன்றைய தமிழகமெங்கும் எதிரொலித்துக் கொண்டுதான் இருக்கிறது.

ஏட்டில் இப்பாட்டுகள் இலக்கியமாக களிநடம் புரியும் காட்சி [...]வினம் காலடிவைக்காத உள் [...]நாட்டு கிராமங்களில் மங்காமல் [...]றையாமல் இன்றளவும் ஒளி [...]சித் திகழ்கிறது.

அத்தகைய காட்சிகளிலே ஒரு [...]ல சுவை பயக்கும் என்ற எண்[...]த்தோடு இங்கு தரப்படுகின்றன.

அவனும், அவளும் ஒரே ஊர். வயதிலும் வாலிபத்திலும் ஒத்தவர்[கள்]. இதைவிட அவ்வூரிலிருக்கும் [...]ண்ணைப் பள்ளிக்கூடத்தில் [ஒ]ன்றாகப் படித்தவர்கள் என்பது [மு]ன் முக்கியம் 'பள்ளிக்கூடத்துத் [...]' என்று அவனும், 'பள்ளிக்கூடத்து அம்மணி' என்று அவளும் அவ்வூரில் பிரக்யாதியடைந்தவர்[கள்]. அவ்வூரிலேயே இருவரும் [...]ன் படிக்கக் கொடுத்துவைத்த[வ]ர்கள். அவனும், அவளும் இப்பொழுது பெரியவர்கள் ஆகிவிட்டார்கள். இருவருக்குமிடையே [...]வந்திரையிட்டு மறைத்தனர் அவ்வூர் மக்கள்.

ஒருநாள் அவன் தோட்ட வெளி[யி]ல் உழுதுகொண்டிருந்தான். [அ]வள் - ஆம்! அவளேதான், இட்[...]ரி ஓரத்தில் வளைந்தோடிக் [கொ]ண்டிருக்கும் ஒற்றயடிப்பதை[யி]ல் அந்தக் கானக்குயில் நடந்து [கொ]ண்டிருந்தது. தலையில் இருக்[கு]ம் சுமையை அலட்சியம் செய்ய[வி]ல்லை என்று அவளது நடக்கும் [தோ]ரணையே காட்டியது.

# கன்னங் கருத்த கிளி கட்டழகன் தொட்ட கிளி!

மு. காளிமுத்து, எல். எம். இ.

அவனும் பார்த்து விட்டான். பழைய நினைவுகள் அவனது இதய வானில் மின்னி மறைந்தன. அவனுக்கே உரிய பாணியில் மென்மைக் குரலால் அந்த மான் விழியாளைக் கூப்பிட்டு வைக்கிறான்.

"உழுத புழுதியிலே
உப்புக்கொண்டு போரதங்கம்
உப்பு விலை சொன்னுக்கால்
கொப்புப் பண்ணி போட்டிடு
வேன்"'

அவள் உப்பொன்றும் கொண்டு போகவில்லை. தன் அண்ணனுக்குப் 'பழையது' தான் கொண்டு சென்றாள். வேண்டுமென்றே அவளை வம்புக்கழைத்தான்.

பாட்டைக் கேட்டதும் பாவை திரும்பிப் பார்த்தாள். அவனைப் பார்த்ததும் வெட்கம் அவளைப் பிடுங்கித் தின்றது. பதில் ஒன்றும் சொல்லாமல் கடைக்கண் வீச்சை அவனுக்குப் பரிசளித்துவிட்டுப் பாவை பறந்துவிட்டாள்.

சிறிதுதூரம் சென்றதும் அவளுக்கு அவனுடன் பேசாமல் வந்தது என்னமோபோல் இருந்தது அவனுக்கும் அவள் செய்கை என்னமோ போல்தான் இருந்தது.

சில நாட்களுக்குப்பின் அதே வழியில் அவள் வரும் வாய்ப்புக் கிடைத்தது. அவனைக் கண்டதும் நாணம் அவளைக் கப்பிக்கொண்டாலும் எப்படியும் பேசவேண்டும் என்று முடிவுக்கு வந்துவிட்டாள். அவள் பேசினளா? இல்லை! இல்லை!! பாடினாள்;

"பருத்தி எடுக்கையிலே
பலநாளும் வந்த மச்சான் -
நான்
ஒருத்தி எடுக்கையிலே
ஓடிவந்தால் ஆகாதோ!"

முன்பு அவளைச் சந்தித்ததிலிருந்து அவளைப் பார்க்கும் பல சந்தர்ப்பங்களை உண்டுபண்ணிக்கொண்டான். சொந்த விஷயம் என்று அந்தச் சொர்ணத்தைக் கண்டு வரலானான். ஆனால் அவன், அவள் தோட்டத்துக்குப் போயிருந்த போதெல்லாம் அவள் பலபேருடன் பருத்தி எடுத்துக்கொண்டிருந்தாள். எனவே அவளை நாடிவந்த நாயகனை தனியாகக் காணும் வாய்ப்பு அவனுக்குக் கிட்டவில்லை. சூழ்நிலைச் சூறாவளியில் அவர்கள் பிரிக்கப்பட்டுக் கிடந்தார்கள். இச்சேதியையெல்லாம் துக்கம் தொண்டையை அடைக்க எடுத்துக் கூறி சோகிக்கிறாள்.

பலபேருடன் அவள் பருத்தியெடுத்துக் கொண்டிருக்கும்போது பலதடவை வந்த அவன், அவள் தனித்திருக்கும்போது ஒரு தடவையாவது ஏன் வரக்கூடாது என்று கேட்கிறாள்.

அவள் தந்த அந்த சோகக் கதைக்கு அவன் பதிலளிக்க முடியாமல் தலை கவிழ்ந்தான். ஆறுதல் மொழி கூறிப் பின் அந்த ஆரணங்கை அனுப்பி வைக்கிறான்.

நாட்கள் நகர்ந்தன. இருவர்க்குமிடையே நெருக்கம் வளர்ந்தது. இதற்கிடையில் அவளுடைய திருமணப் பேச்சு மெதுவாக உருவெடுத்தது. மணமலர்ச் சோலையில் மகிழ்ந்தாடிக் கொண்டிருந்த அந்தப் பசுங்கிளியை திருமணம் என்ற வல்லூறு துரத்தியது. அடைக்கலம் புக ஆதரவு கிடைக்காமல் அணங்கு அலறித் துடித்தாள்.

மனம் ஒப்பாத ஒருவனை மணாளனாகக் கொள்ளும்படி தாய்தந்தையர் கொண்ட கருத்து அவளை வாட்டி வதைத்தது. வண்ணமலர் வாசலில் பூத்திருந்தும் சூட்டமுடியவில்லையே என்று எண்ணி எண்ணி உள்ளம் விங்கினாள். ஆனால் அவளுக்கு மணாளனாகத் தாய்தந்தையர் பார்த்தவனுக்கும் அவளுக்கும் "மணப் பொருத்தம்" இல்லையென்ற நிமித்தகர் வாக்கு அந்தக் கெண்டை விழியாளை இன்பக் கேணியில் துள்ளி விளையாடச் செய்தது.

அவள் வாழ்வில் ஏற்பட்ட இந்தப் பூகம்பத்திற்குப் பிறகு ஒரு நாள் அவன், அவளைப் பார்க்கப் போகின்ற பொழுது அவள் தனியாகவே இருந்தாள். அவனைக் கண்டதும் நிகழ்ச்சியை எவ்வாறு எடுத்துக் கூறுவது என்ற குழப்பமான நிலையில் கனிவாக அவன் அவளைக் கேட்கிறான். ஒயிலான பாட்டைக் கேளுங்கள்.

"கத்தாளைப் பள்ளத்திலே
கண்ணெருமை
மேய்க்கையிலே
அன்னு சொன்ன
வார்த்தையெல்லாம்
அழிக்காதே பெண்மயிலே!"

அவளது திருமண வதந்தியைக் கேள்வியுற்ற அவன், அவளது எண்ணத்தை அறிய மீண்டும் ஆவல் கொள்கிறான். கத்தாளை நிறைந்த பள்ளத்தில் எருமை மேய்த்துக் கொண்டு சொல்லிய வாக்குறுதி என்னவாயிற்று என்று கேட்கிறான். அதுமட்டுமா? இன்னமும் கேட்கிறான்.

"சோளம் விதைக்கையிலே
சொல்லிவிட்டுப் போனதங்கம்
சோளம் கருதாச்சு
சொன்ன சொல்லு
என்னாச்சு."

காதல் மணத்தைக் கடிதில் முடித்துக் கொள்ளலாம் என்று கன்னி அவனிடம் வாக்களித்திருந்தாள். ஆனால் சூழ்நிலைச் சூறாவளியில் சிக்கிய அவர்கள் பிரிக்கப்பட்டனர். எனவே அவன் அவளைச் சந்தித்து, சோளம் விதைக்கையில் கூறிய செய்தி அது வளர்ந்து கதிராக முதிர்ந்தும் கூட முடியவில்லையே! ஏன்? எனக் கேட்டான்.

அந்தோ பரிதாபம்! அவளா மணத்திற்குத் தடையாக இருக்கிறாள். இல்லவே இல்லை! அவளது உள்ளத்திற்கு மட்டும் பேசத் தெரிந்திருந்தால் அது கொட்டியிருக்குமே ஓராயிரம் துடிப்புச் செய்திகளை. என்றாலும் அமைதியாக - ஆனால் ஆணித்தரமாக அவளின் முடிந்த முடிபைக் கூறுகிறாள்.

"மறந்தால் மறப்பதில்லை
மறந்துவிட்டும் போவதில்லை;
அழிந்தால் அழிவதில்லை
அழிந்துவிட்டும்
போவதில்லை."

அவள் அளித்த அன்பு மொழியை அச்சாரம் வாங்கிக் கொண்டு தலைநிமிர்ந்து நடந்தான். நடந்து சென்றவன் நண்பனைக் கண்டான். காதலித்த கன்னிகை மாற்றான் ஒருவனை மணாளனாகக் கொள்ளப் போகிறாள் என்று கூறினான். கூறிய நண்பனுக்குத் தனது காதலின் வன்மையைக் கூறுகிறான். அழகும், வீரமும் பின்னி இழைந்தோடி கிடக்கும் கிராமியப் பாடலின் எளிமைதான் என்னே!

"கன்னங் கருத்த கிளி
கட்டழகன் தொட்ட கிளி
மற்றொருவன் தொட்டாலும்
மாய்த்திடுவேன் பொன்
னுயிரை."

அவள் எனக்கு உரிமையானவள். நான் தொட்டு சுவை பார்த்த தேன் சுவைக் கனி. என் ஆவியைக் குடித்த பின்னர்தான் மாற்றான் ஒருவன் அவளைத் தொட முடியும் என அறுதியிட்டுக் கூறி விடுகிறான்.

இப்பொழுது வேறு ஒரு சிக்கலும் அவர்கள் வாழ்க்கையில் முகிழ்த்தது. அவளுடைய அத்தை மகன் சொந்தத்தை உரிமை காட்டி மங்கையை மாலையிடத் தீர்மானித்தான். இச்செய்தி 'அவனு'க்கு எட்டியது. முன் எச்சரிக்கையாக பச்சோலை எடுத்து பாவைக்கு மடல் எழுதி விட்டான்.

"செம்புச் சிலை யெழுதி
சிவந்த புள்ளை பேர் எழுதி
வம்பிலே தாலி கட்ட
வாராண்டி உங்க அத்தை,
மகன்."

அவளுடைய அத்தை மகன், மணத்திற்கு அவளுடைய பெற்றோரும் அவளும் இணங்காவிட்டால் கூட, அவளை வம்பில் தூக்கிச் சென்று தாலி கட்டிவிடுவது எனத் தீர்மானித்து விட்டான். அத்தை மகனின் கேவல எண்ணத்தை விளக்கமாகவே அறிவித்து விட்டான் 'அவன்.'

அத்தை மகனின்மேல் பிரியமில்லாத அவளது பெற்றோரும் அவனது வஞ்சக எண்ணத்தைத் தெரிந்து, தடபுடலாக காதலர் இருவர்க்குமே திருமணத்தை நிறைவேற்றி மகிழ்ந்தனர்.

இருவருடைய கட்டுப்பாட்டின் முன் போலி உரிமையைக் கொண்டு 'அத்தை மகனால்' பிரிக்க முடியவில்லை. இருவரும் உள்ளம் பூரிக்க குதூகலமான இல்வாழ்வில் ஈடுபட்டு விட்டார்கள்.

அத்தை மகன் ஒரு நாள் அவர்கள் வீட்டு வழியே வந்தான். அவளுடைய கலகலப்பான சுடு பாட்டையும், களிநத்தையும் கண்டு பொறுமையுற்ற அவன் அவளைக் கேலி செய்கிறான்.

"வட்ட வட்டப் பாறையிலே
வரகரிசி தீட்டயிலே
ஆர்கொடுத்த சாயச் சீலை
ஆலவட்டம் போடுதம்மா."

அவனது குத்தலான கேள்வி அவளது நெஞ்சைப் பிளந்தது. அவனுக்குச் சரியான பதில் கொடுக்கிறாள். துல்லிதமான அவள் பதிலைப் பாருங்கள்.

"ஆரும் கொடுக்கவில்லை
ஆலவட்டம் போடவில்லை
கைப்பாடு பட்டல்லவோ
கட்டினனே சாயச்சீலை."

நெற்றி வேர்வை நிலத்தில் விழ கடின உழைப்பினால் கட்டிய சீலை. வேறு யாரும் தானமாகக் கொடுக்கவில்லை என்று கன்னத்தில் அறைந்த மாதிரி பதில் கூறுகிறாள். நாணி அவன் சென்றுவிட்டான்.

கிராமியச் சூழ்நிலையை அடிப்படையாகக் கொண்டு எளிமையும், இனிமையும் ததும்பும் வண்ணம் பாடல்கள் அமைந்து அவைகள், அவர்களின் வாயாலேயே இசைப் படிக்கும்பொழுது கேட்பவரின் மனம் களிப்புக்கடலில் ஆழத்தான் செய்கிறது. ★

## பூச்சரம்...

— 1ம் பக்கத் தொடர்ச்சி —

அன்னையின் அழுகுரல் கேட்டு, அவள் அந்த வீட்டுவாசலிலேயே நின்று கூவினாள்.

குற்றமுள்ள நெஞ்சு பாரத்தைக் குறைத்துக்கொள்ள விரும்புகிறது. தன்புறம் உள்ளம் ஆறுதலை எதிர்பார்க்கிறது. குறத்தியின் குரல் கிழவியின் செவிகளில் புகுந்தது. தள்ளாடிக்கொண்டே வந்தாள் வெளியே!

"நல்ல மனசுக்கு நாசமில்லே தாயே! பயப்படாதீங்க. எல்லாம் தேவயிருக்கிறான்" என்று சொல்லிக்கொண்டே கிழவியின் கையைப் பிடித்தாள் குறத்தி. ஆறுதலின்றி, தேற்றுவாறின்றி அலறிக்கொண்டிருந்த அவள் குறத்தியைக் கண்டதும், அவள் உரையைக் கேட்டதும் நெருங்கிய உறவினர் வந்துவிட்டதுபோல எண்ணி, உள்ளே அழைத்துப்போய் உபசாரம் செய்ய ஆரம்பித்துவிட்டாள்.

குறிகாரிகள் மனோதத்துவம் அறிந்திருந்தால் புகழ் சேர்த்துக் கொள்ளமுடிகிறது. முகபாவத்தை முனுமுனுப்பைப் பார்த்து, வார்த்தை ஜாலத்தைக் கணக்கிட்டுச் சொல்லிவிடுகிறார்கள். உண்மையா அல்ல! ராகத்தோடு கூடிய பாடலே! அரட்டல், மிரட்டல், அடிபிடி சண்டை சொல்லே, களவு முதலியவை கவலிசம்பந்தப்பட்டவர்கள்தான் போலீஸ் ஸ்டேஷனுக்கு வருவார்கள் என்ற உண்மையை அறிந்த அந்தக் குறிகாரிக்கு துன்பப்பட்டவர்களும், பொருளை இழந்தவர்களும்தான் அதிகமாகக் குறி பார்க்கிறார்கள் என்பது எப்படித் தெரியாமல் போய்விடும்?

"போன பொருள் கிட்டுமா? ஆனபடி வந்து சேருமா?" என்று வருத்தப்படாதே தாயே! நல்ல மனசுக்கு நாசமில்லே ஒரு நாளும்!" என்று உபதேசத்தையே யான தாய் உபதேசத்தையே அவள் சொல்ல ஆரம்பித்தாள். சபல நெஞ்சங்கள் அதை உபதேசமாகவே எடுத்துக்கொள்கின்றன! உண்மையைச் சொல்லிவிட்டாள் மாரியத்தாள். ஒரு குறையும் இனி இல்லே என்று பெருமூச்சு அல்லவா விடுகிறாள்!

மகள் வந்துவிடுவாள் என்று மாநாவுக்கு ஒரு நம்பிக்கை — அசட்டு நம்பிக்கை! முகத்தைக் கழுவிவிட்டு குத்துவிளக்கை ஏற்றி வைத்தாள். வெளியிலே படுத்திருந்த புலி மனிதன் செருமினான்.

★

பகல் கருகிக்கொண்டிருந்தது. குறத்தி குடும்பத்தினர் கிராமத்துக் கடைசியில் விரிந்து படர்ந்து கிடந்த ஆலமரத்தடியில் டேராப் போட்டிருந்தனர். மெலிந்த பசுமாடு ஒன்றுடேராவுக்குப் பக்கத்தில் படுத்திருந்தது. ராஜ குடும்பத்தினர் புலிக்குட்டிகளோடு விளையாடுவதைப் போல், குறத்தி வீட்டுக்குழந்தைகள் நாய்க்குட்டிகளோடு ஓடியாடி விளையாடிக்கொண்டிருந்தனர். ஐந்து வயதுடைய, குறத்தி

மகள் ஒரு பூச்சரத்தை எடுத்துக்கொண்டு ஓடிவந்தாள். ஓடிவந்தவள் நேராக அவளது தாயிடம் ஓடினாள். அந்தப் பூச்சரத்தைப் பார்த்த குறத்தி கொஞ்சநேரம் பலத்த யோசனையில் ஆழ்ந்துவிட்டாள். இந்த வாசனையை இதற்குமுன் எங்கோ அனுபவித்திருப்பதாக அவள் உணர்ந்தாள். இந்த நல்ல வாடை எங்கே கிடைத்தது? அவளது நினைவுக்கு வந்தது ஒரே ஒரு இடம்தான்! கண்ணிய மிகுந்த அந்தக் கிழவியின் அழுகுரலும், அந்த வீட்டின் தோற்றமும்தான் குறத்தியின் மனக்கண்ணுக்குப் பட்டன.

நன்கு இருட்டிய பிறகு, அந்த வீட்டுக்குப் போனாள். கிழவி அன்புடன் வரவேற்றாள். கிழவியின் பேச்சைக் கவனிக்காமலே, குறத்தி விட்டை மோப்பம் பிடித்துக்கொண்டே இருந்தாள். எரிந்துகொண்டிருந்த விளக்கில் ஒரு மல்லிகைப் பூச்சரம் சுற்றியிருந்தது. கிழவிக்குத் தெரியாமல், தனது மடியிலிருந்த பூச்சரத்தையும் மாறி மாறிப் பார்த்தாள். ஒற்றுமையிருந்தது.

"ஏன் அம்மணி! நம்ம வீட்டுப் பெண்ணு பூச்சூடிக் கொள்ளுமா?"

"பூவா? பூவில்லாமல் அவள் கூந்தலைப் பார்க்கமுடியாதே! சொல்லே முழுதும் மல்லிகைதானே வளர்த்தாள் அவளுக்குப் பதிலாக அதோ! குத்து விளக்கைப் பார்க்கிறேன்! அவளைப் போலவே அந்த விளக்கிற்கும் பூச்சரத்தைச் சுற்றியிருக்கிறேன்" - கிழவி சொல்லும்பொழுது அழுதுகொண்டே சொன்னாள்.

"கலங்காதீங்கள் அம்மணி! பொண்ணு எங்கேயும் போக மாட்டாது" என்று தைரியம் சொல்லிவிட்டு குறத்தி போய்விட்டாள். கிழவி கண்ணீரைத் துடைத்துக்கொண்டு படுக்கையில் சாய்ந்தாள்.

குறத்தி கைவிளக்குடன் தன்னுடைய பெண் குழந்தையை அழைத்துக்கொண்டு, பூச்சரம் கண்டெடுத்த இடத்திற்குப் போனாள். அந்த இடம் ஒரு நந்தவனம். கொய்யா மரங்கள் அடர்ந்திருந்தன. அதனடியில் மல்லிகைப் பூச்சரம் சிதைந்து கிடந்தது. கிழவியின் மகள்தான் இங்கே வந்திருக்க வேண்டும் என்று குறத்தி முடிவாக எண்ணினாள். ஓடிப்போய்

கிழவியிடம் சொன்னாள். வேங்கைபோல பதுங்கிக்கிடந்த புலி மனிதனின் செவிகளில் குறத்தியின் பேச்சுப் புகுந்தது.

"என்ன! கொய்யாத்தோட்டத்தில் சுகந்தியின் பூச்சரம் கிடந்ததா? குடி! வா இங்கே! உண்மைதானா? எங்கே அந்தப் பூச்சரம்? கொண்டுவா? அதோடு நமது மல்லிகைப்பூவும் கொஞ்சம் கொண்டு வா!" என்று கதறினான். கிழவிகண்ணீரைத் துடைத்துக்கொண்டே அந்தப் பணியைச் செய்தாள். புலிமனிதன் இரண்டையும் நுகர்ந்து பார்த்தான்! பதில் பேசவில்லே! பெருமூச்சு விட்டான். "என் கண்ணேயும் அவித்து, என்று பெண்ணேயும் கெடுத்தானு பாவி! குடி! குடி! சுகந்தி" என் கனல் கக்கினான்! தொண்டையில் நீர் உள்ளவரை கத்தினான்.

★

மூன்றாம் நாள் இரவு, சுகந்தி கையிலே ஒரு வெட்டுண்ட தலேயுடன் வீட்டின் கொல்லைப்பக்கமாக வந்தாள். விடு பூட்டியிருந்தது. திண்ணையைப் பார்த்தாள். தந்தையைக் காணவில்லே. கொல்லேக் கதவின்

| பன்மொழிப் புலவர் மணிவிழா-நிதி | | | |
|---|---|---|---|
| | ... | ரூ. 1080 | 01 |
| முன் இருப்புப்படி | | | |
| இராசிபுரம், இரா. சி. ராமசாமி | | | |
| சின்னு உடையார் | ... ,, | 3 | 00 |
| | | 5 | 00 |
| மன்னார்குடி கே. வி. கே. சாமி மன்றம் | ... ,, | 5 | 01 |
| பழந்தண்டலம் மாணவர் மன்றம் | ... ,, | 1 | 01 |
| பழந்தண்டலம் தி. மு. க. | ... ,, | 2 | 00 |
| கோவை வெற்றி வேந்தன் | | | |
| வேந்தன்பட்டி ராமலிங்கம் | ... ,, | 1 | 00 |
| இதுவரை மொத்தம் | | ரூ. 1097 | 03 |

நிதி அனுப்பவேண்டிய முகவரி:—

எம். குமாரசாமி,
பொருளாளர், பன்மொழிப்புலவர் மணிவிழா,
7, அருணாசல ஆசாரி தெரு,
சேப்பாக்கம், சென்னை-5.

தாழ்ப்பாளைத் திறந்தாள். ஒரே கோரம்! தாயும் தந்தையும் விஷமுண்டு பிணமாகக் கிடந்தார்கள். சுகந்தி துடித்தாள்.

"பழிக்குப் பழி வாங்கி வந்த என்னைக் கட்டிடணைப்பீர்கள் என்று வந்தேன், மறவன் மகள் கோழையல்ல என, உச்சிமோந்து தட்டிக் கொடுப்பீர்கள் என்று நினைத்து, ஓடோடி வந்தேன்! என்ன அனுதையாக விட்டு விட்டு ஓடிவிட்டீர்கள். இதோ, உங்கள் கண்ணைக் கெடுத்தவனின் தலே! இதோ நெஞ்சுக்காரர் களின் சிரசு!

"என்னே இன்ற இரவு எனது கொய்யாத் தோட்டத்தில் சந்திக்காவிடில், நாளை இரவே, உன் தந்தையின் கண்களைக் கெடுத்ததைப்போல் உன் கண்களையும் கெடுத்துவிடுவேன்" என்ற மிரட்டல் தகவலை வைத்து, அவனைச் சந்தித்துப் பழிவாங்க முன் போய்விட்டீர்களே பெற்றோர்களே!" என்று புலம்பினாள் சுகந்தி. தந்தையைப்போல், தாயைப்போல் தொண்டையில் நீர் உள்ளவரை கத்தினாள். அவள் கூந்தலில் சொருகியிருந்த கருகிய மல்லிகைச் சரம் கீழே விழுந்தது.

## அடுக்குமொழியல்ல...

— 7ம் பக்கத் தொடர்ச்சி —

வடநாட்டில் உற்பத்தியாகும் பொருள்களின் விலே உயர்ந்தால், தென்னுடு அப்பொருள்களுக்குச் சந்தையாய் இருப்பதால், அப்பொருள்களை விற்கும் தென்னுட்டு வியாபாரிகளும் தங்களுக்கான இலாபத்தைக் கூட்டி மேலும் விலேயை உயர்த்தி விற்பர்.

தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை வாங்கும்போதுகூட, தென்னுட்டு மக்கள்பல இன்னல்களை ஏற்க வேண்டியவராவார்கள். இவ்வாறு தென்னுட்டு மக்களுக்குத் துன்பத்தைப் பெருக்கும் திட்டம் தான் இந்த ஐந்தாண்டுத்திட்டம். வடநாட்டு மக்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், தென்னுடவரது வாழ்க்கைத்தரத்தை உயர்த்த வழி வகுக்காமலும் இருக்கும் இந்நிலேயில், சோஷலிச சமுதாயத்தை ஏற்படுத்தப் போவதாகக் "காங்கிரஸ்காரர்கள் கூறுவதெல்லாம் ஏமாற்று வித்தையேயாகும். இத்தைய பாகுபாட்டை நீக்குவதற்குள்ள ஒரே வழி தென்னுட்டில் தொழிற்சாலேகள் பலவற்றை ஏற்படுத்துவதுதான். அதற்காக இத்திட்டத்தில் தென்னுட்டிற்கு அதிகமான தொகையை ஒதுக்க வேண்டும். ஆனால் வடநாட்டு அரசாங்கம் இது பற்றி வாய்மூடியிருக்கின்றது. கேரள அரசாங்கம் தனது மாநிலத்திற்குத் தரப்பட்டு ஒதுக்கப்பட்டுள்ள தொகையை இரண்டு மடங்காக்கித் தர வேண்டும் என்று வடநாட்டு அரசாங்கத்திடம் முறையிட்டுள்ளது. நமது மாநில அமைச்சரவெனில் வடவர் வீசி எறிந்த எலும்புத் துண்டே போதும் என்று திருப்தியடைந்து, வடநாட்டு அரசாங்கத்தின் 'நல்ல பையன்' என்ற பட்டத்தைப் பெற்று, மக்களையும் ஏமாற்றி வருகின்றது.

இதனுல்தான் "நாட்டு வாட்டம் போக்கிட சர்க்கார் நோட்டடித்தால் போதாது" என்றும், "காகிதப்பூ மணக்காது காங்கிரஸ் சமதர்மம் இனிக்காது" என்றும் தி. மு. க. கூறி வருகின்றது. தி. மு. க. இவற்றையெல்லாம் எடுத்தக்காட்டி, தென்னுடு வடநாட்டவரால் விலங்கிடப்பட்டுள்ளது என்று கூறினுல் நமது பொதுவுடைமைவாதிகள், 'ஏகஇந்தியா பஜனை' செய்துகொண்டு, காங்கிரஸ் என்ற இரும்பு விலங்கைத் தமிழ் நாட்டினின்றும் நீக்கிவிட்டு, கம்யூனிஸம் என்னும் தங்க விலங்கை மாட்டிக்கொள்ளலாம் என்று கூறுகிறது. தி. மு. க. கேட்பதெல்லாம் நாட்டு விடுதலேயே தவிர, இரும்பு விலங்குக்கு பதில் தங்க விலங்கல்ல.

இந்த இரண்டாம் ஐந்தாண்டுத்திட்டம் வடவரை வாழவைத்து, அவர்களது வாழ்க்கைத் தரத்தை மட்டுமே உயர்த்தி, தென்னவரை நசுக்கப்போகிறது என்பதை அனைவரும் வெகு விரைவில் உணர்வார்கள். ★



# அடுக்குமொழியல்ல - தென்னுட்டைக் கெடுத்திடும் திட்டம் இது!

"வடநாடு வாழ தென்னுடு தேய்கிறது" என்றல் இது வெறும் அடுக்குமொழி, அவதூறு என்றெல்லாம் பேசித் தப்பிக்க முயல்கிறார்கள் தேசியத் 'திருவாளர்'கள். அவர்களுக்கு உணர்த்தும் வகையில் இந்தக் கட்டுரையில், தென்னுடு, பொருளாதாரத் துறையில் எந்தெந்த வகைகளில் தாழ்ந்திருக்கிறது என்பதைத் தோழர் எஸ். வேலன் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிருர். (ஆ-ர்)

அரசியல் உரிமை பெற்ற ஒவ்வொரு நாடும் பொருளாதார முன்னேற்றமடைவதற்குரிய பல வழி வகைகளை வகுத்துக்கொள்வது முக்கியமாகும். நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கும், மக்களது வாழ்க்கைத் தரம் உயர்வதற்கும் அடிப்படையாக அமைந்துள்ளது தொழில் முன்னேற்றமாகும்.

இந்தியத் துணைக்கண்டத்தின் ஏகபோக அரசுரிமை பெற்று இறுமாந்து நிற்கும் வடவர் வகுத்துள்ள இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் தம் நிலப்பகுதியாகிய வடநாட்டைச் செல்வங்கொழிக்கும் பொன்னுடாக, தொழிற்சாலேகள் மிகுந்த 'புண்ணியஸ்தலங்களாக' மாற்றுவதற்கான வழிவகைகளை வகுத்துள்ளனர். வடவரது ஆட்சிக்குட்பட்ட தென்னகம், அவர் தம் முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே புறக்கணிக்கப்பட்டதோடல்லாமல், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்திலேயும் வலிந்து புறக்கணிக்கப்பட்டுள்ளது. தென்னகத்தின் பொருளாதார முன்னேற்றத்திற்கான வழிவகைகள் இத்திட்டத்தில் வகுக்கப்படவில்லே. வடநாட்டு அரசாங்கம் இத்திட்டத்தின்படி பொதுத்துறையில் ரூ. 4,800 கோடியும், தனியார் துறையில் ரூ. 2,400 கோடியும் செலவிட இருக்கும், தமிழ் நாட்டிற்கு ரூ. 170 கோடியும், கேரளத்திற்கு ரூ. 86 கோடியும் மட்டுமே ஒதுக்கியுள்ளது. இவ்விரு மாநிலங்களுக்கும் ஒதுக்கப்பட்டுள்ள தொகை மிக மிகக் குறைவு என்று தென்னுட்டவர் தெளிவாக எடுத்து இயம்பிய போதிலும், நம்மனேரது முயற்சி விழலுக்கிறைத்த நீராகவே ஆயிற்று.

வடவரின் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தால் தென்னகம் நேரடியாகப் பாதிக்கப்படுவதோடு, மறைமுகமாகவும் பெரிதும் பாதிக்கப்படுகிறது என்பதைத் தெளிவுபடுத்துதல் இன்றியமையாததாகும்.

தொழிற்சாலேகள் யாவும் வடநாட்டிலே நிறுவப்பட இருப்பதால் வடநாட்டிலுள்ள மக்கள் பெரும்பாலோர்க்கு வேலே கிடைக்க வசதியுள்ளது. தென்னுட்டில் தொழிற்சாலேகள் ஒன்றிரண்டு மட்டுமே நிறுவப்பட இருப்பதால் நமது மக்களிடையே வேலேயில்லாத் திண்டாட்டம் அதிகமாகும். மேலும் தென்னுட்டு மக்கள் இந்தி அறியார் ஆதலாலும், வடநாடு சென்று தொழிலாற்ற விரும்பார் ஆதலாலும், நமது மக்கள் வடநாட்டின்கண் தொழில் பெற்று வாழ்வதற்கான வாய்ப்பில்லாமல் இருக்கின்றது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் விளைவால் தென்னுட்டு மக்களது வருவாயைக் காட்டிலும் வடநாட்டு மக்களது வருவாய் மிகுந்து, வடவரது வாழ்க்கைத்தரம், தென்னவரது வாழ்க்கைத்தரத்தைக் காட்டிலும் உயர்ந்தது. அவ்வாறே, இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தினுல் வடவரது வருவாய் மட்டுமே பெரிதும் உயரும் சூழ்நிலே ஏற்பட்டுள்ளது. தென்னுட்டு மக்களது வருவாய் உயர்வதற்குரிய தொழில் வளத்தைத் தென்னுட்டில் இத்திட்டம் ஏற்படுத்தவில்லே. விளைவு, வடநாட்டு மக்களது வாழ்க்கைத் தரம் மட்டுமே உயரும், தென்னுட்டு மக்களது வாழ்க்கைத் தரம் மிக மிகக் குறைந்த அளவுக்கே உயரும்.

வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள் பல வடநாட்டுத் தொழிற்சாலேகளில் உற்பத்தி செய்யப்பட்டுத் தென்னுட்டில் விற்பனையாவதால், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின்படி தென்னுடு இனியும் வடநாட்டுப் பொருள்களுக்குச் சந்தையாகவே இருக்கவேண்டிய நிலே ஏற்படுகிறது. இவ்வாறு பலவாற்ருன் தென்னகம் இத்திட்டத்தின்படி நேரடியாகப் பாதிக்கப்படுகிறது.

19ம் நூற்றுண்டில் இந்திய உபகண்டம் இங்கிலாந்து நாட்டின் உற்பத்திப் பொருள்களுக்குச் சந்தையாய் விளங்கியது, அதனுல் இவ்வுபகண்டத்துச் செல்வம் ஆங்கிலேயரால் சுரண்டப்பட்டது. அதுபோன்றே 20ம் நூற்றுண்டில் தென்னுடு-வடநாட்டுத் தொழிற்சாலேகளின் உற்பத்திப் பொருள்களுக்குச் சந்தையாய் இருக்கின்றது. தென்னுட்டுச் செல்வம் அவ்வகையில் வடநாட்டவரால் சுரண்டப்படுகிறது.

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் விளைவுகள் சிலவற்றுல் தென்னகம் மறைமுகமாகப் பெரிதும் பாதிக்கப்படும். இத்திட்டத்தின்படி இந்த ஐந்தாண்டுகளில் செலவிடுதற்குரிய நிதிநிலேயை ஆராயுங்கால் மிக முக்கியமானதும், பேரச்சத்தை விளைவிக்கக் கூடியதுமான ஒரு பகுதி பற்றுக்குறை நிதி நிலேயாகும். இப்பற்றுக்குறை நிதி நிலேப்படி வரும் ஐந்து ஆண்டுகளில் ரூ. 1,000 கோடிக்கு வடநாட்டு அரசாங்கம் ரூபாய் நோட்டுக்களை அதிகப்படியாக அச்சிட்டுச் செலவிடத் திட்டமிட்டுள்ளது.

ரூபாய் நோட்டுக்களை வெளியிடுங்கால், அரசாங்கம் இரு முக்கிய விஷயங்களில் மிக எச்சரிக்கையாய் இருக்கவேண்டும். முதலாவது, ரூபாய் நோட்டுக்களின் செலாவணியில் மக்களது நம்பிக்கையை நிலைநிறுத்தும் பொருட்டுப் போதிய அளவு தங்கம் சென்ட்ரல் பேங்கில் இருக்கவேண்டும். இரண்டாவது; ரூபாயின் வாங்கும் திறனை நிர்ணயிக்கும் பொருட்டு, சென்ட்ரல் பேங்கினுல் வெளியிடப்படும் பணத்தொகையை ஈடு செய்யக்கூடியதாய் நாட்டின் கொள்முதல் பொருள்களின் உற்பத்தி இருக்கவேண்டும். தற்போது அரசாங்கத்தால் அச்சிட்டுச் செலவிடப் போகும் தொகைக்கு ஈடு செய்யத்தக்க கொள்முதல் பொருள்களின் உற்பத்தி, இத்திட்டத்தின் இரண்டாம், மூன்றாம் வருடங்களுக்குப் பின்னரே இருக்கும் என்று கூறப்படுகிறது. இந்நிலேயில் அரசாங்கம் 1000 கோடிக்கு ரூபாய் நோட்டுக்களை அதிகப்படியாக வெளியிடுவது மிக எளிதான காரியமாகத் தோன்றினும், அதன் விளைவுகள் மிகவும் ஆபத்தைத் தரக்கூடியவைகளாக இருக்கின்றன.

அரசாங்கத்தால் அச்சிட்டு வெளியிடப் போகும் பணத்தொகையைச் சரிக்கட்டக்கூடிய பொருள் உற்பத்தி தற்போது இல்லே. அளவுக்கு மீறிய பணத்தை நாட்டில் நடமாட விடும்போது ரூபாயின் மதிப்பு குறையும். அதன் விளைவாகப் பொருள்களின் விலே நஞ்சு போல ஏறிக்கொண்டே செல்லும். இத்திட்டப்படி ரூ. 400 கோடிக்கு மேலும் வரியிடுக்க அரசாங்கம் முனைந்துள்ளது. வரியினுல் பாதிக்கப்படும் பொருள்களின் விலே மேலும் கூடுதலாகும். சென்ற ஆண்டு இந்தியா வந்த 'உலக பாங்க் மிஷன்' தனது அறிக்கையில் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்திலுள்ள பற்றுக்குறை நிதி நிலே ஆபத்தை விளைவிக்கக் கூடியதாயும், மிக அதிகமான தொகையாக உள்ளது என்று குறிப்பிட்டுள்ளது.

தொழிற்சாலேகளில் பணத்தை முதலாகப் போடும் காலத்திலிருந்து, அவை உற்பத்தி துவங்கும் காலம் வரை என்று சொல்லக்கூடிய பொருளாதாரத்தின் ஆபத்தான கட்டம் ஏற்படக் கூடிய சூழ்நிலே உள்ளது. இந்த இடைப்பட்ட காலத்தில் பொருள்களின் விலே ஏறிக்கொண்டே செல்வதை நடைமுறை வருடத்திலும், அடுத்த வருடத்திலும் நாம் காணலாம். இத்தகையதோர் பொருளாதாரச் சீர்குலேவை 8 ஆண்டுகளுக்கு முன்பு சீன நாட்டில் கண்டோம். ஒரு சாதாரண பொருளை பல நோட்டுக் கற்றைகளைக் கொடுத்து வாங்கினர் சீன மக்கள். அரசாங்கம் மிக எச்சரிக்கையாய் இருந்து விலேயை வைத் தடுக்க வகை செய்தாலன்றி, இந்தியாவும் சீன நாட்டில் கண்ட பொருளாதார நிலேயை அடையும்.

எல்லாவற்றையும் விட இப்பற்றுக்குறை நிதித் திட்டத்தால் வடநாட்டு மக்களைக் காட்டிலும் தென்னுட்டு மக்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். எவ்வாறெனில் இந்த ஐந்தாண்டுத் திட்டப்படி பல்லாயிரம் கோடி ரூபாயை வடநாட்டில் செலவிடப்பட இருக்கின்றது. தென்னகத்தில் மிகக் குறைந்த அளவுதான் செலவிடப்பட இருக்கிறது. அதனுல் பண நடமாட்டம் வடநாட்டில் அதிகமாகவும் தென்னுட்டில் மிகக் குறைவாகவும் இருக்கும். அந்நிலேயில் வடநாட்டு மக்களது வருவாய் மட்டுமே உயரும் சூழ்நிலே ஏற்பட்டுள்ளது. அதன் விளைவாக அவர்களது வாங்கும் சக்தி அதிகமாக இருக்கும். ஆனால் தென்னுட்டு மக்களது வருவாய் உயர்வதற்குரிய வழி இன்மையால், தென்னவர் வடநாட்டு மக்களது வருவாயை விட மிகக் குறைந்த வருவாய் பெற்று, அவர்களைக் காட்டிலும் மிகக் குறைந்த வாங்கும் சக்தியுடையவர்களாக இருப்பர்.

1957, 58 ஆகிய இரு ஆண்டுகளில் பற்றுக்குறை நிதித்திட்டத்தின் விளைவால் பொருள்களின் விலே உயர்ந்துகொண்டே போகும். எவ்வித விதிப்பினுலும் பொருள்களின் விலே உயரும். பொருள்களின் விலே ஏறினுலும் வடநாட்டு மக்களது வருவாய் உயர்வதற்குரிய வழி வகுக்கப்பட்டுள்ளதாலும், அதனுல் அவர்களது வாங்கும் சக்தி அதிகமாகும் ஆதலாலும், பொருள்களின் விலே உயர்வு அவர்களை அதிகம் பாதிக்காது. ஆனுல் தென்னுட்டு மக்களது வருவாய் குறைவாக இருப்பதாலும், அவர்களது வாங்கும் சக்தி உயர வழி இல்லாமையாலும் பொருள்களின் விலே உயர்வு நம்மவரைப் பெரிதும் பாதிக்கும்.

— 6ம் பக்கம் —

**முத்தமிழ் முன்னேற்ற மன்றப் பொதுக்கூட்டம்**

10-6-57 திங்கள் மாலே 6 மணிக்கு
ராயப்பேட்டை,
அம்மன் கோவில் திடலில்
தோழர் சி. வெங்கடேசன் தலேமையில்
கண்ணதாசன்
A. V. P. ஆசைத்தம்பி M.L.A.
நடிகர் N. S. நாராயணன்
ஆகியோர் பேசுவர்.

# சிரிப்புத்தான் வருகுதைய்யா!



'புதுமை புதுமை' என்று தெரியாமலா சொன்னார்கள். புதிதாக ஒரு காரியத்தைச் செய்யப் போனால் எவ்வளவு உற்சாகமாக இருக்கிறது!

புதிதாகப் பணக்காரனானவன்...

புதிதாக மண முடித்தவன்...

புதிதாக மதுக் குடிப்பவன்...

புதிதாகப் புகழ் 'வாங்கியவன்'...

புதிதாக சினிமாவில் நடிப்பவன்...

—புது அனுபவம் சுகந்தான்! இந்த வரிசையில்...

புதிதாக காங்கிரசில் சேர்ந்தவர்...

புதிதாக காங்கிரஸ் எம். எல். ஏ. ஆனவர்...

இவர்களையும் சேர்க்கலாம். இவர்களுக்கு தலை என்பது கழுத்து என்பதில்தான் இருக்கிறதா என்று சந்தேகம் எழும். இடுப்பு ஆடை நழுவுவதுகூடத் தெரியாமல் குதிப்பார்கள். இந்த ரகத்தில் ஒரு 'குழந்தை' கிளம்பியிருக்கிறது. ஆலையில்லா ஊரில் இலுப்பைப்பூச் சர்க்கரை என்பது மாதிரி, காய்ந்து கருவாடாகிப்போன காங்கிரசுக் கடையில் இந்தப் புதுமீன் புறப்பட்டிருக்கிறது!

புறப்பட்டவர் புதியவராக இருந்தாலும் புலவர்; படித்தவர். மகாகனம் பொருந்திய காமராசரோடு ஒப்பிட்டால், உயர்ந்தவர்தான்! ஆனால் இவரது 'குளறுபடி'களைப் பார்த்தால் படித்தவர்தானா என்ற ஐயம் புறப்படும்!

குடந்தையில் போய் இந்த அம்மையார் ஈ.வே.ரா. மாதிரியே உளறியிருக்கிறார்.

"சினிமாப் பார்க்கிற காசை வரியாகக் கொடுங்கள்" என்கிற ஈரோட்டு சித்தாந்தத்தைக் கடை விரித்துப் போட்டிருக்கிறார்.

"பெண்களே! நகைகளைக் கொடுங்கள்"

"பெண்களே! ரவிக்கையைக் கொடுங்கள்"

—என்று கேட்பதுமாதிரி இது ஒரு ரகம்!

கொடுக்கலாம்; தவறில்லை.

சினிமா என்ன, கஞ்சி குடிக்கவே வழியில்லாதவர்கள் இந்த நாட்டில் ஏராளம்! அவர்கள் எதைக் கொடுப்பது? பழைய 'தடப்பம்' இருந்தால் கொடுக்கலாம்! 'காதறுந்த குதிரை'களைக் கொடுக்கலாம். ஓட்டுப்போட்ட பாவிகளுக்கு இது வேண்டியதுதான்! பெண்களின் தாலிகளை அறுக்க மந்திரிமார்கள் புறப்படுவதும்...அம்மையார்களே அறுப்பதற்குத் துணைபுரிவதும்...வேறு எந்த நாட்டில் நடக்கும்!

தமிழ்நாட்டுப் பெருமக்களே! ஐந்தாண்டுகளில் உங்களை அடியோடு புதைப்பதற்கு...வடநாட்டு ஆணைக்கட்டுகளில் உங்கள் தலைகளைத் திணிப்பதற்கு... வடநாட்டு ஆலைகளில் உங்கள் ரத்தத்தை எண்ணெயாக ஓட விடுவதற்கு...கொடுங்கள்! வரி கொடுங்கள்!

ஏ! உருப்படாத பாரதமாதா! உன் மகிமையே மகிமை!

ஏ! கங்கைகொண்ட தமிழா! உன் பங்கைக் கொண்டு கொடு!

ஏ! கடாரங்கொண்ட தமிழா! உன் கபாலத்தைக் கொடு!

ஏ! இமயங்கொண்ட தமிழா! சமயம் வந்துவிட்டது-சொர்க்கத்தைக் காண!

★

அரசியலில் வெள்ளைக்காரனுக்குப் பிள்ளையாகப் பிறந்து, கொள்ளைக்காரர்களின் தலைவராக விளங்கும் பேன்மைதங்கிய டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களுக்குப் புகழ்மாலை:

வீரரே!

தீரரே!

சூரரே!

நீர் வாழுக!

ஒவ்வொரு வரிக்கும் ஒவ்வொரு ஆண்டாக உமது ஆயுள் நீளுக!

வரியால் பெருமை பெற்ற நெருப்புப்பெட்டியின் குச்சிகள் போல், உமது குடும்பம் பெருகுக!

உமக்கு ஓட்டுப் போட்டவர்களின் மூளையைப்போல், உமது துயரங்கள் நீங்குக!

'விலை வளர்ந்த' தேயிலைப் பானம்போல், உமது ஆனந்தக் கண்ணீர் வழிந்து ஓடுக!

இட்லர் சாட்சியாக - முசோலினி சாட்சியாக - நீரே எங்கள் 'குலவிளக்கு!'

சியாங்கேசேக்குக்கு ஒரு பார்மோசா பரிசாகக் கிடைத்தது போல, உமக்கும் ஒரு அந்தமான் தீவு இருப்பது எங்கள் பாக்கி[ய]மல்லவா?

வரி மந்திரியே!

ஏழைகளின் மண்டை ஓ[ட்]டிலே 'ருத்ரதாண்டவ'மாடு[ம்] எங்கள் ஈசுவரனே!

டி. வி. சுந்தரமையங்கா[ர்] தாலாட்ட...கோத்தாரி அ[...]சன்ஸ் சீராட்ட...ராஜாக்களு[ம்] கூஜாக்களும் பாராட்ட வளர்[ந்த] செல்வமே!

நின் நாமம் மூன்றும் (அதாவ[து] டி. டி. கே.) நீடு வளர்[ந்து] செழித்துக் கொழுப்பதாக!

உமது அன்னை உம்மை கருவாகப் பெற்றபோதே, இந்[த] நாட்டின் தலையெழுத்து பத்[து] மாத பிண்டமாகப் பிடிக்கப்[பட்டு] விட்டது!

வாழ்க!

இந்த ஏழைகள் தங்கள் அ[...] பணிந்து வேண்டிக்கொள்[வ]தெல்லாம், இன்னும் குறை[ந்த]பட்சம் இருபது சுடுகாடுக[ளை]யாவது தமிழ்நாட்டிற்குக் கட்[டித்] தரவேண்டும் என்பதுதான்!

கொள்ளி வைக்க ஒரு ஈ.[...]ராவையும் நீர் கூடப் பெற்றி[...]பது, கள்ளமில்லாத தமிழ[...]குக் கரைகாணா மகிழ்வைத் [த]கிறது!

நீர் அடியோடு வாழ்க! இ[ன்]னும் இருபதாண்டுகளுக்கு நீ[...] நிதியமைச்சராக இருந்து, [...]களுக்கு சொர்க்கலோகப் பத[...] தரவேண்டுமாய்க் கேட்[டுக்] கொள்ளுகிறோம்.

இப்படிக்கு[...]

மெஜாரிட்டிக்குக் கட்[...]படும் ஜனநாயகத்தின்[...] இந்த நாட்டில் மெஜாரி[...]யாக விளங்கும்,

"கைநாட்[...]

—வணங்காமு[...]

## பாரூக் காதலின் மறுமலர்ச்சி!

எகிப்து மாஜி அரசி நரீமன் சதாக் மீது மாஜி, மன்னர் பாரூக் மீண்டும் காதல் கொண்டிருப்பதாக பேரூத் செய்திகள் கூறுகின்றன.

23 வயதான நரீமன் சதாக், தற்சமயம் அம்மைநோயின் காரணமாகத் தனது தாயுடன் தன் மலைச்சாரல் வாசஸ்தலமான மாளிகையில் இருந்துவருகிறாள்.

மாஜி மன்னர் பாரூக், அங்குள்ள நரீமனுக்கு எழுதிய கடிதத்தில் தான் மீண்டும் அவளை மறுமணம் செய்து கொள்ள விருப்புவதாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

நரீமன் சதாக் மாஜி மன்னரிடமிருந்து மணவிலக்குப் பெற்றபின், கெய்ரோவைச் சேர்ந்த டாக்டர் அத்ஹம் நகீபை மணம் செய்து கொண்டாள். சிறிது நாட்களுக்குப் பிறகு இந்தத் திருமணத்தையும் ரத்து செய்துகொண்டாள். டாக்டர் நகீபிடமிருந்து அவள் எவ்விதத் தொகையும் பெறவில்லையென்று கூறப்படுகிறது.

அவள், தனது சிறிய தகப்பனார் ஒருவரின் பாதுகாப்பில் இருந்து வருவதாகக் கூறப்படுகிறது. அம்மையால் அவதியுறும் நரீமனுக்கு, ஒரு ஜெர்மன் மருந்து பிரயோகிக்கப்படுவதால், அவளுடைய அழகு குன்றாமலிருக்குமென்று டாக்டர்கள் கூறுகின்றனர். அவள் சவூதி அரேபியாவுக்குச் சென்ற சில நாட்களில் அம்மை நோயால் பாதிக்கப்பட்டாள்.

---

ஜூலை 13உ இதழிலிருந்து...

# தென்றல்

12 பக்கங்கள்

விலை 0-2-6 அணா (16 புதிய காசு)

வெண்பாப் போட்டி: துவளாத தொடர் கதை: வசனநடை ஆராய்ச்சி—

## நெப்போலியன்

மாவீரனின் முழு வரலாறு!

மற்றும் பலப்பல!

ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் கண்ணதாசன், ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை-6. தமிழ் நா[...]

